# எதிர்பார்த்தது







நா. சோமசுந்தரம்

# எதிர்பார்த்தது



ஆசிரியர்:

நா. சோமசுந்தரம்




பதிப்புரிமை]　　1942　　[விலை அணா: 12



'முத்தமிழ்க் கலா வித்துவரத்தினம்'
அமரர் அவ்வை சண்முகம் அவர்கள் நினைவாக
மதுரை காமராஜ் பல்கலைக் கழகத்துக்கு
அன்புடன் அளிக்கப்பட்டது.

**27-1-1979**

நகரத்தார் பிரஸ், கண்டனூர்.

# —: முகவுரை :—

எனது நண்பர் நா. சோமசுந்தரம் எழுதி வெளியிடுகின்ற "எதிர்பார்த்தது" என்னும் நாவலைப் படித்தேன். தமிழ் நாவல்கள் நான் படித்து பல வருடங்களாயின. உரை நடை நூல்கள் கிடைப்பதற்கு அரிதாயிருந்த தமிழகத்து முதலில் பொருட் சுவையேனும், சொற் சுவையேனுமில்லாத, தமிழ் நாவல்கள் மல்கிக் குவிந்து மலிந்தன. அவைகளிற் காணும் கதைகள் கூட அநேகம் பிறமொழி நாவல்களிலிருந்து அப்படியே எடுத்துக் கையாடியவை. சிலப்பதிகாரம்-சிந்தாமணி-கம்பராமாயணம் போன்ற செய்யுட்கள் பிறந்து மிளிரும் தமிழிலே இன்னோரன்ன உரை நடை நாவற் குப்பைகள் தோன்றாதிருத்தலே நலமெனத் தமிழ் நாவலர் இவற்றை வெறுத்தொதுக்கினர். ஆனால், நாளடைவில் இக்குப்பைகளுள்ளும் சில மாணிக்கங்கள் போன்ற நல்ல நாவல்கள் தோன்றி வருகின்றன.

"எதிர்பார்த்தது" என்னும் நாவலின் போக்கும் நடையும் இன்று நாம் காணும் ஒரு நல்ல பேசும் படக்காட்சியைப் போன்றது. நடிகர்களின் குணங்களையும், உணர்ச்சிகளையும், செயல்களையும், நயம் பட நடிக்கின்ற ஒரு நாடகத்திலோ — படக்காட்சியிலோ எப்படி நேரில் நாம் கண்டு மகிழ்கின்றோமோ, அவ்விதமே சொற்களால் தீட்டிய இந்த நவீனத்திலும் ஆசிரியர் படம் பிடித்துக் காட்டுகிறார். சொல் நடையும் போக்கும் எளிதாகவும், உலக நிகழ்ச்சிகளுக்கு ஒத்ததாகவும் இருப்பதினால், படிக்கிறவர்களை நாவலில் வரும் சம்பவங்களில் மனமொன்றி ஈடுபடச் செய்கின்றது.

இந்த நவீனத்தில் புது நாகரீக அரசியல் சமூக சீர்திருத்தக் கொள்கைகளும் மிளிர்ந்து இதனை அழகு செய்கின்றன. நீடித்த கொடுங்கோலாட்சியை களைந்தெறியப் பாடுபடும் ஏழை மக்கள், இளைஞர்கள், புரட்சி, எத்தனையோ கலகங்கள், சண்டைகள், உயிர்ச் சேதங்கள், நாசங்கள், பின்பு புதிய கொள்கைகளுக்கு வெற்றி. பிரஞ்சு ருஷ்யப் புரட்சிகள் இவைகளையே நமக்கு நினைப்பூட்டுகின்றன. இக்கதையில் கத்தியின்றி ரத்தமின்றி யுத்தமின்றி நிகழ்ந்த ஒரு புரட்சியின் பயனாக முடியாட்சி முடிந்து குடியாட்சி நிலவி விடுகின்றது. முடியரசனின் மைந்தன் ஜெயசிங் தன் அரசைக் குடிகளுக்கு நல்கி குடியாட்சி கோலி மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட குடி அரசுத் தலைவனாக விளங்குகிறான். இத்தகைய மாறுதலை ஏற்று தங்கள் ஆக்கம் குலைந்து ஏழைப் பாட்டாளி மக்களோடு ஒன்றுபட்டு வாழ இசைந்திலர் அந்நாட்டு முதலாளித்துவ பிரபுக்கள். எனவே, அம்முதியர்கள் இந்நிலையை மாற்றி உட்பகை எழுப்பி அந்நாட்டைப் பாழ் செய்ய சூழ்ச்சியும் சூதும் செய்யச் சூழ்கின்றனர். பசுத்தோல் போர்த்திய புலியைப் போன்று ஏழைப் பாட்டாளி மக்களின் மனதைக் குழப்பி கலைப்பதற்கு இச்சூழ்ச்சியின் தலைவனை உக்கிரமசிங்கன் ஞானனந்தன் என்ற துறவி வேடங் கொண்டு செய்யும் தந்திரங்களும் உரைகளும் நம் நாட்டு நிலைகளுக்கேற்ப மிகவும் பொருத்தமானதாக இருக்கின்றன. தங்கள் ஆதிக்கத்தையும் செல்வாக்கையும் இழந்து மீண்டும் அதனைப் பெற சூழ்வு செய்யும் கூட்டத்தின் முன் அணியில் மூவாசைகளும் பிடித்து உந்தும் காத்தவராயனையும், அச்சூழ்வுகளை தன்னுடைய உயர்ந்த ஒற்றின் திற

னாலும், கூரிய மதிநுட்பத்தினாலும் களைந்து அவர்களுக்கு விலங்கு மாட்டிக் கைதி செய்வதற்கு அவனது மகனான தினகரனையும், தொழிலாளிகள் நன்மைக்காக பிருந்தாவனத்தை ஏற்படுத்தி நடத்துவதற்கு அவனது மனைவியான தர்மாம்பாளையும் படைத்து, அத்தகைய கொடியனின் மனைவியும் அவள் வயிற்றுதித்த தினகரனும், நற்பயனெய்தி உய்வதற்கேற்ற மனமாறுதல் எவ்வித மடைந்தன ரென்பதைச் சுட்டி, அழகு — காதல் — கற்பு — அஞ்சாமை — பொதுமக்களுக்கு ஊழியஞ் செய்வதில் உள்ள ஊக்கம் — மனத்திண்மை — இன்னோரன்ன குணங்கள் அமையப் பெற்ற கோகிலமென்ற புதுமைப் பெண்ணையும் காட்டி, இக்கதையை எடுத்தவர்கள் முதலில் இருந்து இறுதிவரை படித்து முடிக்க வேண்டுமென்ற ஆவல் கொள்ளுமாறு எழுதி யிருக்கும் சிறப்பு பாராட்டத் தக்கது.

பற்றுதல்களின் காரணமாய்க் கடமையை மறந்து உழலும் உலகத்திலே மனிதன் உற்ற கருமத்தை ஓம்பி எய்துறும் விளைவுகளை எண்ணாது விருப்ப வெறுப்பற்று எக்காலத்தும் எவ்விடத்தும் யார்மாட்டும் பணி செய்து கடனிறுத்தலே தலையாய அறமென்பதை வலியுறுத்தி யிருப்பதும் போற்றத் தக்கது.

**தேவகோட்டை**
**5—7—42** } **(ஒப்பம்) சோ. இலக்குமிரதன் பாரதி**

# எதிர்பார்த்தது

## அத்தியாயம் 1.

### கண்காக்ஷிப் பொருளின் கல்யாண வேட்டை.

பிரம்மாவுக்கு என்னகோபமோ தெரியவில்லை, காத்தவராயரைச் சர்வ விகாரமாக்கி மக்களிடையே விட்டுவிட்டார். அதோடு மட்டுமல்ல மக்கள் குலமே சர்வ விகாரம் பொருந்தியதாயும், தான் ஒருவன்தான் மன்மதனைப் பழிக்கும் ரூபமுடையவனென்ற எண்ணத்தையும் கொடுத்தார். என்ன கொடுமை! அவருடைய லீலைகளுக்குக் காத்தவராயர்தானா அகப்பட்டார்? மேலும் கொஞ்சம் பணத்தையும் கொடுத்து "பணக்காரர்" என்ற பெருமையில், ஆடம்பர அலங்காரங்களுடன் வெளியாருடன் பழகுவதால், இப்படியொரு சிருஷ்டியும்—கண்காக்ஷிப் பொருளும் உலகிலிருக்கிறதென மக்கள் அறியவேண்டுமென்று நினைத்தார் போலும்!

உருவத்தைத்தானிவ்விதமாக்கிவிட்டார்; குணத்தையாவது நல்லதாகக்கொடுத்திருக்கக்கூடாதா? அதிலும் பிரம்மன் பூரணமாக வஞ்சித்துவிட்டாரென்றே சொல்லவேண்டும். உலகிலுள்ள துர்க்குணங்களை எல்லாம் ஒன்றுசேர்த்து அவருக்கு குணமாக அமைத்தார். குடி சூது கொலை மங்கையர் முதலியவைகள்

பற்றி தனித்தனியே பல நூல்கள் காத்தவராயரால் எழுதப்பட்டு வெளிவந்தால், இதுவரை உலகிலே நாம் கேள்விப்படாத பல அரிய பெரிய உண்மைகள், தம் அனுபவங்கள், முதலியவற்றைத் தொகுத்து மக்களுக் குப் பயன்படுத்தியிருப்பார். ஆனுல், அரசாங்கமென்று ஒன்று இருக்கிறதே!

இப்படியான பெரியார் இதுவரை அரசாங்க விருந் தாளியாகாமலா இருக்கிறுர்? என்ற கேள்வி எழு வது சகஜம். அரசாங்க சட்டத்திற்கு அகப்படும் அவ் வளவு மட்டமான ஆசாமியல்ல இவர். அரசாங்கத் துப்பறியும் இலாக்காவினர் எவ்வளவு சாமர்த்தியசாலி களோ, அதைவிடப் பன்மடங்கு சாமர்த்தியம் வாய்ந் தவர் நமது காத்தவராயர்.

உருவமாச்சு. குணமாச்சு. இனி தொழிலைப்பற்றி சிறிது கவனிப்போம். அவருடைய தொழில் லேவா தேவி-வட்டிக்கு பணம் கொடுத்து வாங்குவது. ஒருவர் சீக்கிரம் பணக்காரராவதற்கு ஏற்ற-சிறந்த தொழில் களில் இதுவுமொன்று. அந்தத்தொழிலை நமது காத்த வராயர் கையாளும் முறையும் அலாதி. அப்படியா! என்று ஆச்சரியப்படவேண்டாம். அதற்கு ஒன்று சொன்னுற் போதும். அவரிடம் ஈடாக வந்த எந்தப் பொருளும் உரியவனுக்குப் போய்ச் சேருவது வழக்க மில்லை. வந்ததை விட்டு விட்டுத் திண்டாடும் சுபாவம் நமது காத்தவராயரின் தொழில் அகராதியிலேயே கிடையாது.

சரி இனிமேல் அவரது இல்லறம் — அது மகாரகஸ்யம்! பிரம்மச்சாரி என்று பெயர். ஆனால் கொஞ்ச காலமாக அவரது மனதைக் "கல்யாண"மென்ற பெரிய நோய் பிடித்துக்கொண்டிருக்கிறது. ஒரு பணக்காரரின் கல்யாணப் பேச்சென்றால், அதுவும் காத்தவராயருக்குக் கல்யாணமென்றால், ஊருக்குள்ளே எவ்வளவு பரபரப்பிருக்கும். எல்லோர் செவிகளிலும் தானாகவந்து விழும் செய்தியல்லவா? இந்தச் செய்தி என் காதிலே விழுந்ததும் ஓடிச்சென்று காத்தவராயரைப் பார்த்தேன். அவரைப்பற்றியறிந்தேன். இப்பொழுது உங்கள் முன்னிலையில் கொண்டுவந்து நிறுத்திவிட்டேனவரை.

நேயர்களே! மேலே சொல்லிய உருவம் குணம், தொழில் இல்லறம் முதலியவற்றுடன், 60 வருஷங்களையும் ஒன்றாய்ச் சேர்த்து உங்கள் மனதிலே ஒரு உருவத்தை எழுப்புங்கள். ஆம்! அவரே அவர்தான் காத்தவராயர் !!

புதுமாப்பிள்ளையாகப்போகுமவரின் உல்லாசமாளிகைக்குச் செல்வோம். மாளிகையைப் பார்த்தவுடன் ஊரிலுள்ள யுவதிகளோ, அன்றி அவர்களைப் பெற்றவர்களோ, பிரம்மித்து அப்படியே மயங்கி, நான்—நீ என்று விழுந்தடித்துக்கொண்டு வரவேண்டுமென்ற எண்ணத்தில், சர்வஜாக்ரதையாக அலங்காரஞ்செய்யப்பட்டிருந்தது. இவர் யார் யாரைக்கருதி இவ்வளவும் செய்தாரோ, அவர்களில் ஒருவரேனும் பெயருக்காவது வந்து பார்த்துவிட்டுப் போகக்கூடாதா?

யாரோ சம்மந்தமில்லாத சிலர் சில சமயங்களில் அங்கு வருவதுண்டு. அப்படித் தப்பித் தவறி வந்துவிட்ட இரண்டொருவரை வெளியேவந்து வரவேற்க வேண்டுமென்ற உயர்ந்த எண்ணமாவது உதிக்காமலிருந்திருந்தால், இவர் வெளியேயும் வந்திருக்கமாட்டார்; இவர் உருவத்தைக்கண்டு அஞ்சி வந்தவர்கள் விழுந்தடித்துக்கொண்டு ஓடியுமிருக்க மாட்டார்கள். வருவார்கள், வந்து சாவதானமாக அங்கு மலிந்துகிடக்கும் கண்ணுக்கினிய பொருள்களைப் பார்த்து ஆச்சரியப் பட்டுக்கொண்டே வெளியே போவார்கள்; எதிர்ப்படும் தமது நண்பர்களிடம் மாளிகையின் சிறப்பைப் பற்றிச் சொல்லுவார்கள். இதைக் கேள்வியுற்ற பலரும் மாளிகையைப் பார்ப்பதற்கு வரக்கூடும்; அப்படிவரும் பலரில் பெண்களையுடைய தகப்பனார்களுமிருக்கலாம். ஒருக்கால், அவர்களுக்கு 'இவ்வளவு பெரிய தனிகருக்கு நமது பெண்ணைக் கொடுத்தாலென்ன' என்ற எண்ணமுமுதிக்கலாம்.

காத்தவராயரின் மனதிலே சிற்சில சமயங்களில் தோன்றும் நல்ல எண்ணமும் அவருக்குக்கெடுதலையே விளைவிக்கிறது.

அவர் இந்த கல்யாணவிஷயத்தில்தான் "தோல்வி" என்று ஒன்றிருப்பதையறிந்தார். ஆனால், எளிதில் அதை உணர்வதற்கு அவரால் முடியவில்லை. இதுவரை தானாகவரும் என்று எதிர்பார்த்துக் கொண்டிருந்த அவர், இப்போது தினமும் பலதடவை பெண் மார்க்

கெட்டுக்குள்ளே போய்ப்போய் வந்தார். ஒன்றுக்குப் பத்தாக விலைகொடுக்கிறேனென்றாலும், அந்தப்பொல்லாத வியாபாரிகள் இவருக்குப் பெண்ணை விற்க இசையவில்லை.

எதிர்பார்த்ததும் வீணாயிற்று. போய் அலைந்தும் புண்ணியமில்லை. மேலே என்ன செய்வதென்பது பற்றி யோசித்து எதற்கும் கலங்காத அவரது மனமும் கொஞ்சம் குழப்பமடைந்தது. தானோ தனிகன்; புகழ்நிறைந்தவன், அப்படியிருந்தும் தனக்குப் பெண் கிடைப்பதில் என் இவ்வளவு சிரமம்? என்ற கேள்வி புதிதாக எழ ஆரம்பித்தது. ஆனால், அதன் காரணமட்டும் புலனாகவில்லை. இதையாரிடமாவது கேட்டிருந்தால் அவர்கள் சொல்லியிருக்கக்கூடும். அப்படிக் கேட்பதும் தமது கௌரவத்திற்குக் குறைவு என்றெண்ணினார் போலும்! இவ்வளவு குழப்பத்திடையேயும், ஓர் அபூர்வ யோசனை அவர் மூளையில் தோன்றியது. அவருடைய கல்யாண முயற்சியில் அது ஒன்றுதான் பாக்கி. தன்னிடம் கடன் வாங்கி சுணக்கமாக இருக்கும் புள்ளிகள் யார் யாரென்று அந்த ஏடுகளைப் புரட்டினார். அப்படியிருந்த அநேகம் புள்ளிகளில் ஒருவரிடமட்டும் கல்யாணஞ் செய்யவேண்டிய — பருவமடைந்த பெண்ணிருந்தது. அவர் ஜவுளி வியாபாரஞ் செய்து நஷ்டமடைந்து, வியாபாரத்திற்காக நமது காத்தவாராயரிடம் வாங்கிய கடனைத் திருப்பிக்கொடுப்பதற்கு வழியறியாது விழித்துக் கொண்டிருந்த சாம்பசிவம் என்பவர். அவருக்

கொரு புதல்வியுண்டு. பெயர் கோகிலம். அந்த ஊரில் கமலாதேவி என்பவர்களால் நடத்தப்பட்டு வரும் "பிருந்தாவனம்" என்னும் கைத்தொழில் நிலையத்தில் வேலை பார்த்து வருகிறாள். வியாபாரத்தில் வீழ்ச்சியுற்று பணமுடையரல் எளிய வாழ்க்கை நடத்திக்கொண்டிருக்கும் சாம்பசிவத்தின் மீது நமது காத்தவராயரின் கிருபாகடாக்ஷம் விழுந்தது. உடனே சாம்பசிவத்தைக் கூட்டிக்கொண்டு வரும்படி ஆள் அனுப்பிவிட்டு அவனுடைய வரவை ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்.

அவன் வந்ததும், பேச்சை எப்படி விட்டு எப்படித் திருப்பவேண்டும், ஒப்புக்கொள்ளாவிட்டால் எப்படி அவனை வழிக்குக் கொண்டு வருவது என்பன போன்ற விஷயங்களை ஆழ்ந்து யோசித்துக் கொண்டிருந்தார்.

அப்பொழுது ராயப்பன் — அவரின் வேலையாள் அந்த அறைக்குள் நுழைந்தான். அவன் அவரிடம் பல வருஷங்களாக வேலை பார்த்து வருகிறான். நம்பிக்கையும், எஜமானரிடம் விசுவாசமுங் கொண்டவன். கொஞ்சம் முரட்டு சுபாவம். கருத்துப்பருத்த தேகம். சிவந்த பெரியவிழிகள். ஆட்டுக் கொம்புபோன்று நீண்டு திருகிக்கொண்டிருக்கும் மீசை. மொத்தத்தில் நமது கண்காக்ஷிப் பொருளின் உடன் பிறப்பென்று கூடச்சொல்லலாம் அவனை. உண்மையில் இவருக்கும் அவனிடம் அத்தகைபபிரியம். வேடிக்கையாகப் பேசு

வான். சமயம் நேரிடும் போதெல்லாம் அவருக்கு யோசனையாளனுகவுமிருந்து கொள்வான். நிற்க, அறைக்குள் வந்தவன் காத்தவராயரைப் பார்த்து "எஜமான்! அவரு வந்திருக்கிருருங்க, இங்கே கூட்டிக்கிட்டு வரட்டுங்களா?" என்ருன்.

"ஓ! வந்துவிட்டானு!? சரி நீ போ; நான் போய் அவனைப் பார்க்கிறேன்" எனக்கூறியவனையனுப்பி விட்டு, எழுந்து சென்று முன் ஹாலில் கவலையோடு நின்று கொண்டிருந்த சாம்பசிவத்திற்கு நல்வரவு கூறியழைத்து வந்து சரியாசனம் கொடுத்து உட்காரும்படி சொன்னர்.

காத்தவராயர் கூப்பிடுவதாக ராயப்பன் சொன்னபோது, தான் அவரிடம் வாங்கியிருந்த கடனைப் பற்றிக்கேட்பதற்காகவே யிருக்குமென்று எண்ணிக் கவலையடைந்தான். இங்கு வந்ததும் காத்தவராயரே எழுந்து வந்து பரிவுடன் வரவேற்றது; அவனுக்கு ஆச்சரியமாக இருந்தது. அதோடு, அவனுக்குச் சமமான ஆசனங்கொடுத்து உட்காரச்சொன்ன போது பிரமித்துப் போய்விட்டான். உட்காருவதா? வேண்டாமா? என்று யோசித்தான் சில விநாடி. அதற்குள் காத்தவராயர் "சாம்பசிவம்! ஏன் யோசிக்கிருய்? மட்டுமரியாதை எல்லாம் மனதிலே யிருக்கவேண்டும்; வெளித்தோற்றத்தில் காண்பிப்பதில் அர்த்தமில்லே. சும்மா உட்கார்" என்று வற்புறுத்திக் கூறவே, உட்கார்ந்தான். மனங்கூசியது. தேகம் குன்றியது. இவ்

வளவும் எதற்காக ....? என்பது அவனுக்கு விளங்க வில்லை.

காத்தவராயரும் அமர்ந்தார். சில நிமிஷங்கள் ஒரே அமைதி; புயலுக்கு முன்னுள்ளது போன்று. காத்தவராயரும் தாம் நினைத்து வைத்திருந்ததை அதற்குள் ஒருமுறை ஞாபகப்படுத்திக் கொண்டார்.

"என்ன சாம்பசிவம்! வீட்டில் குழந்தை சௌக் யந்தானே?" என்ற கேள்வியுடன் ஆரம்பித்தார் காத் தவராயர்.

"சௌக்கியத்திற்கென்னங்க. ஏதோ பசித்த நேரம் சாப்பிட்டுக்கொண்டிருக்கிறோம்."

"வியாபாரத்தை நிறுத்திவிட்டியாமே! அப்ப டியா?"

"ஆமாங்க சரக்கு விலையெல்லாம் கண்டபடி ஏறி ப்போய்ட்டுது. வியாபாரத்திலே மிச்சம் கிடைப்ப தற்கு வழியில்லை வேறென்ன செய்வது?"

"அப்போ, இப்போது என்ன செய்து கொண் டிருக்கிறாய்?"

"செய்கிறதென்னங்க? குழந்தை பிருந்தாவனத் திலே வேலை செய்யிரா. நான் வீட்டிலேயிருக் கிறேன்."

"அடபாவமே! உன்னைப்போல் நாணயமுள்ள வியாபாரி இந்த ஊர் கடைத்தெருவிலே யாரு இரு க்கா?..........உம்...........எல்லாம் அதிர்ஷ்டமிருந்தால்

தான். இருந்தாலும் பாரு சாம்பசிவம்! நீ என்ன வியாபாரந் தெரியாதவனு? சாமர்த்திய மில்லாதவனு? இன்னும் கொஞ்சம் சிரமப்பட்டுப் பார்த்தால் இந்த ஊரிலேயே நிறைய சம்பாதிக்கலாம்".

"அதிலென்னமோ எனக்கு நம்பிக்கையில்லை. வியாபாரி மகனுய்ப் பிறந்தேன்; அவனுலேயே வளர்க்கப்பட்டேன். அதே பயிற்சியும் பெற்றேன். அதே வியாபாரத்தைத் தான் நானும் செய்து வந்தேன்................அதிலென்ன இருக்கிறது? நீங்கள் சொல்லுவது போல அதிர்ஷ்ட மிருக்கவேண்டும். எவ்வித கஷ்டப்பட்டேனும் உங்களுடைய பணத்தைக் கொடுத்துவிட்டால், எனக்கு வேறு கவலையில்லை."

"எனக்குத் தரவேண்டியதிற்கென்னப்பா; நானென்ன ஒரு நாணயமான வியாபாரிக்குத் தானே கொடுத்திருக்கிறேன். நான் தான் கண்டவர்களுக்கு கடன் கொடுக்கிறதில்லையென்று உனக்குத் தெரியுமே. அது எப்படியோ யிருக்கட்டும், இப்படியொரு நல்ல மனிதன் கஷ்டப்படுவதைப் பார்ப்பதற்கு எனக்கும் கஷ்டமாக இருக்கும். அதனுலேதான், கேள்விப்பட்டவுடனே உன்னை விசாரிப்பதற்காகக் கூட்டிவரச் சொன்னேன்"

"எனக்கு வேறொரு கஷ்டமுமில்லை. உங்களிடம் வாங்கிய கடன் அப்படியேதங்கி நாளுக்குநாள் வட்டி ஏறிக்கொண்டிருக்கிறதே என்பது தான்."

"வாஸ்தவம்! ஆனுல், உன் விஷயத்திலே நான் வட்டியைக்கூட பெரிதாய் நினைக்கவில்லை. உன்னுடைய மனக்கவலை யொழிந்து நீ மேலும் நாணயமுள்ள, பெரிய வியாபாரியாவதற்கு என்ன உதவி வேண்டுமானுலும் செய்யத் தயாராயிருக்கிறேன்" என்ருர்.

காத்தவராயர் தானு இப்படிப் பேசுகிருர்? சோழியன் குடுமி சும்மா ஆடாதல்லவா? இதில் ஏதோ விஷயமிருக்கிறதென்று தீர்மானித்தவனுய்: "ரொம்ப சந்தோஷம்! ஆனுல், எனக்கந்த எண்ணமில்லை. மேலும் உங்களுடைய உதவியைப்பெற்று ஏராளமான பணத்தைச் சம்பாதித்து என்ன செய்யப் போகிறேன்?"

"என்ன சாம்பசிவம் அப்படிச் சொல்லுகிருய்? பெண்ணிருக்கிறது; அவளுக்கு கல்யாணம் செய்ய வேண்டும், சீதனம்-சாமான்கள்வேறு கொடுக்க வேண்டும். தாயில்லாதபெண்—பாவம், அவள் மனதிற்கு திருப்தியாய் எல்லாம் செய்யவேண்டாமா? உன்னுடைய குறைக்காலமும் கவலையில்லாது கழிய வேண்டும். இத்தனை காரியமும் பணமில்லாமல் நடைபெறுமா? இந்தக் காலத்திலே பணமில்லாதவன் பிணந்தான்."

"வாஸ்தவன்தான். அதற்கென்ன செய்வது? காலமல்லவா சரியா வாணும். பெண்ணை ஏதோ நல்ல இடமாகப் பார்த்துக் கொடுக்கணுமுண்ணு தான் நினைத்திருக்கிறேன்"

அட பைத்தியக்காரா! காலம் வரட்டுமென்று காத்துக்கொண்டிருந்தால் எப்போ காலம் வர்றது? எப்போ பெண்ணுக்கு கல்யாணம் செய்யிறது? அதைப் பற்றி ஏதாவது முயற்சி செய்தாயா?"

"அதைப்பற்றி இதுவரை யோசிக்கவில்லை."

"இங்கே பார் சாம்பசிவம்! பெண்ணுக்கோ வயது ரெம்ப ஆயிட்டுது. காலமோ சரியாயில்லை. சீக்கிரம் நல்ல இடமாகப் பார்த்து கொடுத்துட்டா உன் கவலையும் ஒழியும்" என்று அவனிடம் அதிக அனுதாபங்கொண்டவர் போலவும், அவன் குடும்ப விஷயத்தில் அதிக அக்கரைகொண்டவர் போலவும் கூறினார்.

சாம்பசிவம் யோசித்தான்; தான் அவரிடம் கடன் வாங்கிய அன்று முதல் இடையில் ஒரு நாளேனும் கடன் விஷயமாகவோ — பிறவிஷயமாகவோ; தன்னிடம் எதுவும் பேசாத அவர், இன்று தன்னை அழைத்துவரச் செய்து தன்னுடைய நிலைமைக்கு வருந்துபவர் போலும், கடன் விஷயமாகப் பொருட் படுத்ாதவர் போலவும், தன் பெண் கல்யாண விஷயமாய் அதிக அக்கரை காட்டியும் பேசக் காரணமென்ன? இவர் கல்யாணஞ் செய்துகொள்ளப் போவதாக வெளியில் பரவிய வதந்தி இவன் காதிலும் விழுந்திருந்தது. இவர் இவ்வளவு தூரம் சுற்றிச் சுற்றி வருவது தன் பெண்ணைக் கல்யாணஞ்செய்து தரும்படி கேட்பதற்காகவா? என்ற சந்தேகங் கொண்

டான். மேலும் வழ வழாவென்று பேசிக்கொண்டிருக்க விரும்பாதவனாய், "உங்களைப்போன்ற பெரிய மனுஷாள் மனது வைத்தால் எதுவும் சீக்கிரம் முடிவடையும். நல்ல பிள்ளையாக நீங்கள் பார்த்துச் சொன்னால் சரி. விஷயமும் முடியும். என் கவலையும் ஒழியும்" என்றான் சாம்பசிவம்.

காத்தவராயரின் திருவதனத்தில் ஒருவித புன்சிரிப்புப்படர்ந்தது. தன் வழிக்கு அவனைக்கொண்டு வந்து விட்டதாக நினைத்தார்போலும்!

"எப்போதுமே சொல்லுகிறேன் சாம்பசிவம்! தன்னாலே ஓர் காரியம் முடியவில்லையானால், தயங்காமல் தன் நண்பர்களின் உதவியை நாடவேண்டும். அதுதான் புத்திசாலித்தனம். இப்போபாரு! எனக்கென்ன குறைவு. கடவுள் கிருபையால் ஏராளமான பணமிருக்கிறது. என்ன இருந்துமென்ன? பிற்காலத்தில் என் பெயரைச் சொல்லிக் கொண்டிருக்க குடும்பமா — குட்டியா என்ன இருக்கிறது? ஒன்றுமில்லை. அதனாலே, நல்ல குடும்பத்துப்பெண்ணாகப்பார்த்து கல்யாணஞ் செய்துகொண்டு ஒரு கவலையுமில்லாமல் சௌக்கியமாயிருந்திடலாமென்று நினைக்கிறேன். இந்த எண்ணம் ரொம்ப நாளாயுண்டு. உலகம் ரெம்பதட்டுக்கெட்டுப்போச்சு. நாகரீகமென்ற பெயரைச் சொல்லிக்கொண்டு நல்ல குடும்பத்துப் பெண்களெல்லாம் தலைகீழாய் மாறிவிட்டதுகள். என்னடான்னா பெண்கள் சுதந்திரமாம்! யார் இவர்

களைக்கட்டிப்போட்டு வைத்திருக்கிறது! பெண் கல்விச்சாலைகள்—கைத்தொழில் நிலையங்கள்—பெண்கள் முன்னேற்ற சங்கம்—இவைகளுக்கெல்லாம் அரசாங்கத்தில் சலுகை! என்னமோ எல்லாம் பூண்டோடழிவதற்குத்தான். அதனால்தான் பணக்காரர்களிடம் பெண்கேட்க இஷ்டப்படவில்லை. சாம்பசிவம்! உன்னிடம் பணமில்லை என்றாலும், நீ யோக்கியமானவன். உயர்ந்த குடும்பத்தைச் சேர்ந்தவன். உனது புதல்வியைப்பற்றி நான் கேள்விப்பட்டிருக்கிறேன். நம்மிரு குடும்பங்களுக்கிடையே இப்படியொரு சம்மந்தமேற்படுவதால், உனது நிலையில் உயர்வும், எனது குடும்ப விருத்திக்கு வழியுமேற்படும்'' என்று கூறி அவனுடைய பதிலை ஆவலுடன் எதிர்பார்த்தார்.

சாம்பசிவத்தின் சந்தேகம் ஒருவழியாகத் தீர்ந்தது. எனினும், அவருக்கு என்ன பதில் சொல்வதென அறியாது திகைத்தான். ஒரு பணக்காரனுடைய விருப்பமது. நாமோ அவனிடம் கடன் பட்டிருக்கிறோம். அவனது விருப்பத்தை மறுத்தால், அவனால் தனக்கு அதிக கஷ்டங்கள் ஏற்படலாம். என்ன ஏற்பட்டால்தானென்ன? இது விஷயத்தில் நாமெப்படி முடிவு சொல்லுவது? இது யாருடைய விஷயம்? இதனால் நன்மையோ, தீமையோ அடைவது யார்? என்னுடைய நன்மையைக் கருதினால், அவள் வாழ்க்கை என்னுவது? சேச்சே! இது ஒருக்காலும் நடைபெறாது. அவன் எது வேண்டுமானாலும் செய்துகொள்ளட்டும். இளம் பெண்கள் விரும்

பும் எது இவனிடமிருக்கிறது? கேவலம் பணத்திற்காகப்பெண்ணைக்கொடுத்தோம் என்ற அவப்பெயருக்காவாகலாகாது. பெண் சுதந்தரத்தை இவ்வளவு கடுமையாகத்தாக்கும் இவன், சுதந்தர ஆர்வமுள்ள பெண்ணை மணக்கவிரும்புகிறானே? ஒருக்கால், அவளைப்பற்றி இவன் சரியாகத் தெரிந்துகொள்ளவில்லைபோலும்................இவ்வித யோசனைகளிடையே அவனுடைய குழப்பம் மாறி, ஓர் ஸ்திரமுடிவிற்கு வந்து, காத்தவராயரைப்பார்த்து:

"பெரியவரே! மன்னிக்கவேண்டும். எனக்குக் கிடைப்பதான ஓர் அரிய பாக்கியத்தையடையமுடியவில்லையே யென்று ரொம்ப வருந்துகிறேன். உங்களுடைய அபிப்பிராயம் ரொம்ப நல்லதுதான். ஆனால், இது விஷயத்தில் நான் முடிவு சொல்வதற்கில்லை. இது என்னுடைய விஷயமுமில்லை".

"நீ என்னப்பா பயித்தியக்காரனாயிருக்கிறாயே! அது உன் விஷயமில்லாமல் வேறு யார்விஷயம்? பெண்ணுக்குத்தகப்பன் நீ. உன்னையல்லாமல் அவளுக்கு வேறு கதியுமில்லை. நீ என்ன அவளுக்கு கெடுதலையா செய்யப் போகிறாய்? சிறுபெண்—வேண்டிய புத்திமதியைச்சொன்னால் கேட்கிறாள்."

"உண்மை! குடும்பவிருத்திக்காகவே நீங்கள் கல்யாணஞ் செய்துகொள்ள ஆசைப்படுகிறீர்கள். உங்களிடமுள்ள பணத்தை விரும்பும் ஓர் பெண்ணை நீங்கள் கல்யாணஞ் செய்துகொள்ளுங்கள்."

"சாம்பசிவம்! என்ன சொன்னாய்?" என்றார் சிறிது கோபமாக.

"வேறொன்று மில்லை. பணத்தைத்தவிர பெண்கள் விரும்பும் வேறெதுவுமிங்கில்லையே என்றுதான் சொன்னேன்."

"ரொம்பசரி! சாம்பசிவம்! உன்னை ஓர் கௌரவமான மனிதனாக மதித்தேன் – பெரியதவறு. உன்னுடைய அதிகப் பிரசங்கித்தனத்தை என்னிடமே காட்டுகிறாய். சரி நீ போகலாம்" என்று அதிக கோபமாகக்கூறி, அறையின் கதவைச் சுட்டிக்காண்பித்தார்.

சாம்பசிவம் எழுந்து நின்றுகொண்டு, "ஐயா! என்னுடைய கௌரவ—அகௌரவத்தைப்பற்றி இனியொருமுறை சொல்லவேண்டாம். உங்களிடம் நான் வரவிரும்பவில்லை, என்னுடைய வரவையே நீங்கள் விரும்புனீர்கள். என்னுடைய பெண்ணை உங்களுக்குக் கொடுப்பதாக நான் சொல்லவில்லை, நீங்கள் தான் என்னைக் கல்யாணஞ் செய்துதரும்படி கேட்டீர்கள். உங்களுக்கு என்னைச் சமமாகப்பாவித்துத் தான் சம்மந்தம் செய்துகொள்ளவும் நினைத்தீர்கள். நான் மறுத்ததினால், கௌரவத்தில் குறைந்தவனாகிவிடுவேனா? உங்களுக்கும்—எனக்கும் எவ்வளவோ ஏற்றத்தாழ்விருந்தாலும், மனிதத் தன்மையில் உங்களைக்காட்டிலும் நான் மேலானவன் எனக்கருதியே எனது அபிப்பிராயத்தை உங்களுக்குச்சொன்னேன்.

உங்களுடைய நன்மையைக்கருதியே மேலும் சொல்லு கிறேன். இத்தனை வயதிற்கப்புறம் கல்யாணமென்ற ஆசையை விட்டுவிடுவது நல்லது. குடும்பவிருத்தி என்கிறீர்கள். கல்யாணஞ் செய்துகொண்டும் குழந்தை பிறக்கவில்லை யென்றால் என்னசெய்வது? இந்த ஆசை உதித்தது உங்களுடைய துரதிர்ஷ்டமென்று நினைத்துக்கொண்டு, பணத்தை தர்மகாரியங்களிலே செலவழியுங்கள். இந்த ஊரிலே ஆதரிப்பாரற்ற எத்தனையோ அனாதைக்குழந்தைகள் திரிகின்றன. அவர்களை வளர்பதற்கென்று ஒரு ஸ்தாபனத்தை ஏற்படுத்துங்கள். அவர்களுடன் பழகுவதால், குழந்தையில்லையே என்ற கவலையும் ஒழியும். எஞ்சிய உங்கள் வாழ்நாளை இந்த வழியிலே கழிப்பதால், வாழ்க்கையின் இறுதியின்பத்தை யடைவதற்கு வழியும் காண்பீர்கள். நான் உங்களுக்குப் புத்திசொல்ல வரவில்லை. என்னைவிட அனுபவம் நிறைந்தவர்கள். ஆனால், நீங்கள் அடைந்த உலகானுபவம் வேறு, நானடைந்திருப்பது வேறு. ஏதோ எனக்கு நல்லதெனத்தோன்றுவதைச் சொல்லுகிறேன். உங்களிஷ்டம் பிறகு. நான் உங்களிடம் கடன் பட்டதினாலேயே என் பெண்ணைக் கேட்கத் துணிந்தீர்கள். உங்களுடைய கடனுக்கு என்னுடைய வீடிருக்கிறது. அதை உங்கள் பெயருக்கு நாளைக்கே கிரயஞ் செய்து தந்துவிடுகிறேன்............உம்...,........உங்களுக்கு அதிக வேலையிருக்கும் நானோ வேலையில்லாதவன் உங்களுடைய வேலைக் கிடைஞ்சலாக நானிருப்பது

தவறு. நமஸ்காரம்! போய்வருகிறேன்" என்றோர் பிரசங்கமாரி பெய்துவிட்டுச் சரேலென்று வெளியே சென்று விட்டான்.

ஹா! என்ன அவமானம்!! வாழ்விலே இவ்வளவு பெரிய தோல்வியைக் கண்டதேயில்லே. உள்ளும் புறமும் அனலாயெறிந்தது. தன்னை மீறிய ஆவேசத்துடன் அங்குமிங்குமுலாவினர். "இந்த அற்பப் பயலுக்குச் சரியான பாடம் கற்பிக்கிறேன்" என்ற வார்த்தைகள் பதட்டத்துடன் வெளிவந்தன. கல்யாண முயற்சியிலே பாக்கியிருந்த இந்த ஒருவழியிலும் பெருத்த தோல்வி. ஐயோபாவம்!



# அத்தியாயம் 2.

## பிருந்தாவனத்தில்—மூவர்.

மதியின் கதிருக்கும் மலரின் மணத்திற்கும் உருவமுண்டா? அப்படியிருந்தால், கோகிலத்தின் அழகை அதற்கு உவமையாகச் சொல்லலாம். பொறுமையின் பொக்கிஷம்; ஒழுக்கத்தின் பிறப்பிடம், இந்தியப்பெண்மணிகளுக்கு உதாரணமாகத்தான் சொல்ல வேண்டும் அவளை. எல்லோரிடத்திலும் கல கலப்பாகப் பேசும் இனிய சுபாவமுடையவள். அவள் பேசும்போது எழும் தொனி வீணையின் நாதத்தை நமக்கு ஞாபகமூட்டும். இதையறிந்து தானோ என்னவோ "கோகிலம்" எனப் பெயரிட்டனரவளுக்கு! இதோடல்ல, எவ்வளவு நெருக்கடியான சந்தர்ப்பங்களிலும் அவளுடைய சிரித்த முகத்தில் எவ்வித மாறுபாடுங் காணமுடியாது. இவ்வித குணவிசேடங்களெல்லாம் அவளிடமில்லை யென்றால், நூற்றுக்கணக்கான தொழிலாளர்களைக் கொண்ட அந்த ஸ்தாபனத்தின் காரியதரிசியாயிருந்து அதை திறம்பட நடத்த முடியாதல்லவா?

பிருந்தாவனத்தின் தலைவி கமலாதேவிக்கு கோகிலந்தான் ஜீவன். கோகிலமில்லா விட்டால், கமலாதேவியுமில்லை. இருவருமில்லா விட்டால், பிருந்தாவனமும் பிரிந்துவிடும். பிருந்தாவனம் பிரிந்துவிட்டதென்றால், நூற்றுக்கணக்கான தொழிலாளர்கள்பாடு திண்டாட்டமாகிவிடும். இவைகளிலெல்லாம் பொது மக்கள்தான் அதிக சிரமத்தை யடைவார்கள். எப்படி

யெனில்? இந்த ஸ்தாபனத்தினின்று ஒவ்வொரு நாளும் விற்பனைக்குவரும் விலை மலிவான சாமான்களை யடைய முடியாதன்றோ!

இவ்விதமாக ஒருவரை யொருவர் பற்றி, நாளுக்கு நாள் வளர்ந்தோங்கிவந்தது பிருந்தாவனம்.

தலைவி – காரியதரிசி, உயர்ந்தவன் – தாழ்ந்தவன், தொழிலாளி – முதலாளி என்ற வேறுபாடே அங்கில்லை.

வெளியிலிருந்து யாராவது பிருந்தாவனத்தைப் பார்ப்பதற்கு வந்தார்களானால், நாம் எங்காவது வேறு உலகத்திற்கு வந்துவிட்டோமா? என ஒரு கணம் யோசிக்கத்தான் செய்வார்கள். அவர்கள் வசிக்கும் நகரமாகிய நரகத்திற்குப் பிருந்தாவனம் ஓர் சுவர்க்கமாக காக்ஷியளிக்கும். பிருந்தாவனத்தின் காரியாலயம், தொழிற்சாலை, தியானமண்டபம், தொழிலாளர் விடுதிகள், குழந்தைகள் வளர்க்குமிடங்கள், விளையாடுமிடங்கள், பொருட்காக்ஷிசாலை, மனோகரமான பூஞ்சோலை, எல்லாவற்றிலும் தொழிலாளர்கள் — ஆண்—பெண்—குழந்தை—நிர்வாகி எல்லோருடைய அன்புவடிவான உருவங்கள், இவைகளையெல்லாம் ஒருங்கே பார்த்தால் அவர்களுக்கு என்ன தோன்றும்? எத்தனையோ விதமான எண்ணங்கள் தோன்றினும் முடிவில் ஒன்று, மானிட ஜென்மமெடுத்த ஒவ்வொருவரின் கடமை என்ன? என்பதை மட்டும் கற்றுக்கொண்டு விடுவார்கள்.

பிருந்தாவனத்தில் வேலை செய்து கொண்டிருக்கிற தொழிலாளர்களெல்லாம் வயிற்றுக்கில்லாத ஒரே குறையினால்தான் அதை நாடினார்கள். எனினும், அவர்களது மனோபாவங்கள் வெவ்வேறானவையே. அவர்கள் இங்கு வந்து சேர்ந்ததும் இந்த ஸ்தாப னத்தின் சிறந்த நோக்கத்திற் கேற்றவாறு அவர்களது மனப்போக்கும் மாறிவிட்டது. தொழிலாளியொருவ னைப் பார்த்தவர்கள், ஸ்தாபனத்தைப் பார்க்கவேண் டாம். ஸ்தாபனத்தின் நோக்கத்தை யறிந்தவர்கள், அதன் தொழில் முறையைப் பார்க்கவேண்டுமென் பதல்ல. இவ்விதம் தொழிலாளி ஸ்தாபனத்துடனும், ஸ்தாபனம் தொழிலாளியுடனும் ஐக்கியமாகும்படி செய் தது கோகிலந்தான்.

சிறு குழந்தைகளும், வயோதிகப்பருவமடைந் தவர்களும், கோகிலத்தைச் "சின்னம்மா" என்று தானழைப்பார்கள். இது அவர்களுடைய அன்பின் பரிசு.

கவலையென்பதை யறியாது இப்படியொரு சந் தோஷ உலகத்திலே வாழ்ந்து கொண்டிருந்த கோகிலம், அன்று துக்கத்தின் பிரதிபிம்பமாகக் கை யில் ஒரு கடிதத்தை வைத்துப் பார்த்துக்கொண்டே யிருந்தாள். அவளைச் சுற்றிலும் "சின்னம்மா! சின்னம்மா!!" வென்று கூப்பிட்டுக்கொண்டிருக்கும் குழந்தைகளையும் கவனிக்கவில்லை. அவர்களும் கத் திக் கத்திப்பார்த்துவிட்டு, விளையாடச்சென்று விட் டார்கள். இவள் கடிதத்தை திருப்பித்திருப்பி பன்

முறை படித்தாள், படிக்கப்படிக்க அதிக துக்க மேற்பட்டது. கண்களிலிருந்து நீர்த்துளிகள் பல கடிதத்தில் உதிர்ந்தன. மேலும் மேலும் பொங்கிவரும் கண்ணீர் அவளது பார்வையை மறைத்தது. இப்படியாக கடிதத்தை மேலும் படிக்க முடியாமலும், பொங்கிவரும் துக்கத்தை யடக்கமுடியாமலும், தத்தளித்துக் கொண்டிருந்தபோது, அவளுக்குப் பின்புறம் வெகு சமீபத்திலிருந்து "கோகிலம்!" என்று தன்னை யாரோ அழைப்பதைக்கேட்டு, கண்ணீரைத் துடைத்துக்கொண்டாள். தன்னை யழைத்தவர்களுடன் பேசுவதற்குப் போதிய தைரியத்தையும் வரவழைத்துக்கொண்டு, திரும்பிப் பார்த்தாள். அங்கே தினகரன் நின்று கொண்டிருந்தான்.

"வாருங்கள்! இப்போதுதான் வந்தீர்களா?" என்றாள் புன்சிரிப்புடன்.

"10 நிமிஷங்களிருக்கும் ஒரு முக்கியமான விஷயமாய் வந்தேன். காரியாலயத்திற்குப்போய் விசாரித்ததில் இங்கே இருப்பதாகச் சொன்னார்கள். இங்கே வந்தேன். ஆழ்ந்த யோசனையிலிருந்தாற்போல் தோன்றியது, 10 நிமிஷங்கள் பொறுத்துப் பார்த்தேன். ஆனால்; விஷயம் ரொம்ப முக்கியமானது; நிம்மதியைக் கலைக்கவேண்டாமென்று நினைத்தாலும் முடியவில்லை. அதனால் தான் கூப்பிட்டேன்" என்றான் தினகரன்.

"அதற்காக என்ன? விஷயம் முக்கியமாகயிருக்கிறபோது இவ்வளவு நேரம் தாமதித்திருக்க

வேண்டாம். இங்கேயேயிருந்து பேசலாமா? அல்லது காரியாலயத்திற்கு............"

"வேண்டாம் இங்கிருந்தே பேசலாம். ஆனல், நான் வந்த விஷயத்தைப் பற்றிப் பேசுவதற்கு முன் வேறொன்று தெரிந்துகொள்ள வேண்டியவனயிருக்கிறேன்."

"ஆகா! பேஷாய்!! என்னிடம் கேட்பதற்கென்ன தயக்கம்?"

"இன்று ஓர் புதுமையைக் கண்டேன்! என்றும் அன்றலர்ந்த செந்தாமரை போன்றிருக்கும் வதனம், இன்று ஒளியிழந்திருப்பதைக் கண்டதும் திகைத்து நின்று விட்டேன் 10 நிமிஷங்கள் வரை. அப்போது சில கண்ணீர்த் திவலைகளும் கடிதத்தில் உதிர்ந்தன. மன்னிக்கவேண்டும்! நீண்ட நேரம் அதே நிலையில் பார்க்க என்னல் சகிக்கவில்லை..........."

"நன்ருயிருக்கிறது உங்கள் வர்ணனை. நானென்ன மனித சுபாவத்திற்கு புறம்பானவளா? எதையும் ரகஸ்யமாக வைத்திருப்பதற்கு என் மனதிலே தனியிடமெதுவுமில்லை. என் துயரம் என்னுடனேயே இருக்க வேண்டுமென்று தான், அதை மறைத்துக் கொண்டு உங்களுடன் பேச முயன்றேன். நீங்கள் கவனித்து விட்டீர்கள்; இதோ—இக்கடிதத்தை நீங்கள் ஒருமுறை வாசியுங்கள்; நானே படிப்பதற்கு நீர் என் கண்களை மறைக்கின்றது" எனக்கூறி கடிதத்தை அவன் கையில் கொடுத்தாள்.

அதை வாங்கிப் படித்தான்:

அன்புள்ள கோகிலத்திற்கு!

சர்வ மங்களமுண்டாவதாக!!

செல்வி!

உலகப்போக்கு என்னைப் பலவழியிலும் சிரமப் படுத்தி விட்டது. எனது வியாபாரத்தைப் பற்றி மீண்டும் நினைக்க முடியாத அளவிலே அதில் பெருத்த நஷ்ட மேற்பட்டு விட்டதும் நீ யறிவாய். அந்தக் காலத்திலே வாங்கி யிருந்த கடனை ஈடு செய்வதற்காக நமது வீட்டையும் காத்தவராயருக்குக் கிரயஞ் செய்து கொடுத்து விட்டேன். ஒன்றேன யிருந்த நமது குடிசையும் போய் விட்டது. இனி "நமது" என்று செல்ல வேறெதுவு மில்லை. நான் கொடுக்க வேண்டிய தான கடனு மில்லை. பணம் சம்பாதிக்க வேண்டுமென்ற ஆசையு மில்லை.

திடீரென்று இவ்வித மேன் அவசரப் பட்டிருக்க வேண்டு மென்று நீ எண்ணுவாய். அவசரமாகச் செய்ய வேண்டிய அவசிய மேற் பட்டதால் தான்.

காத்தவராயரைப் பற்றி எல்லோரு மறிவர். அவருக்கு இப்பொழுது 60 வயதாகியும், கல்யாணஞ் செய்து கொள்ள ஆசைப்படுகிருர். உன்னைக் கல்யாணஞ் செய்து தரும்படி என்னைக் கேட்டார். கோகிலம்! இதை மனத்தாலும் நினைக்க முடியுமா? கண்டிப்பாக முடியாதென்று சொல்லிவிட்டேன். அவரிடம் கடன் பட்டிருந்ததினுல் தானே துணிந்து என்னைக் கேட்டார்? எனவே, அவருடைய கடனை உடனே கொடுக்க வேண்டிய அவசிய மேற்பட்டது. அதற்கு வீட்டைத் தவிர வேறு இல்லாத படியால், அதையே கிரயஞ் செய்து கொடுத்து விட்டேன்.

இப்பொழுது நான் செய்தது சரியெனவே உனக்குத் தோன்றும். எப்பொழுதும் நீ காத்தவராயர் விஷயத்தில் சற்று ஜாக்கிரதை யாகவே யிரு. கோகிலம்! உயர்

வும்—வீழ்ச்சியும் மாறிமாறி வந்து என்னை சிதறடித்து விட்டது. நீ சிறுமியாக யிருந்தவரை உன்னைக் காப்பாற்ற வேண்டிய பொறுப்பு எனக்கிருந்தது. இப்போது நீ யுவதியாகி விட்டாய். உனது திறமை பிரபல்ய மாகிவிட்டது. உன்னைப் பற்றி பிறர் பேசிக் கொள்வது எனக்கு எவ்வளவோ பெருமையா யிருக்கிறது. புகழ்ச்சிக்கல்ல செல்வி! உனது கடமையைத் தவருது செய்யவேண்டுமென்பதற்காகத்தான் குறிப்பிடுகிறேன். நானும் உன்னைப்போல் பொதுஜன ஊழியஞ் செய்யவே விரும்புகிறேன். அதற்கு முன்னதாக உலக இயல் பற்றியும், நமது பண்டைய நூல்களைப் பற்றியும், தெரிந்து கொள்ள வேண்டியது அவசியமென்றெண்ணியே ஞானனந்தரிடம் போகிறேன்,

இறுதியாக இரண்டோரு வார்த்தைகள். உனது சொந்த விஷயம். நான் வற்புறுத்துவதாகவோ, உனது அபிப்பிராயத்தில் தலையிடுவதாகவோ, எண்ண வேண்டாம். உன் தந்தையின் வார்த்தைகள் என்பதற்காக உன்னிஷ்டத்தை மாற்றிக்கொள்ளவும் வேண்டாம். உனக்கோ வயதாகிக்கொண்டிருக்கிறது. உனக்கேற்ற கணவனை யடைந்து இல்லறத்தை மேற்கொள்ள வேண்டியது உனது கடமைகளில் முக்கிமானதொன்றுகும். உங்கள் ஆஸ்ரமத்திலிருக்கும் ஆசிரியர் தினகரன் உயர்குண முள்ள வாலிபன். ஆஸ்ரமத்தின் வளர்ச்சியில் ஓர் தூண்போன்றவன். நானறிந்திருப்பதைக் காட்டிலும் அவனை நீ நன்குயறிவாய். நான் உங்கள் தலைவியிடம் ஒருநாள் பேசிக்கொண்டிருந்தபோது, நீங்களிருவரும் ஒருவரையொருவர் நேசிப்பதாக அநுமானித்தார்கள். அது உண்மையாகயிருக்குமாயின் உங்களிருவரையும் மனப்பூர்வமாக ஆசீர்வதிக்கிறேன். எனது சம்மதத்தை அன்றே தலைவியிடம் தெரிவித்

திருக்கிறேன். தினகரனுடைய குலங் கோத்திரத்தைப் பற்றி நாமேன் கவலைப்படவேண்டும். இவ்விதமான கலப்பு விவாகங்கள் அதிகமாக நடைபெற்ருல், நமது நாட்டிலே மலிந்து கிடக்கும் சாதி சமய வேறுபாடுகள் நீங்கி இந்தியா! இன்னும் சிலகாலத்தில் ஐக்கிய இந்தியாவாக ஆகிவிடாதா?

நிச்சயம் அவ்விதமாகும். நம்பிக்கையுடனும், பொறுப்புடனும், உனது கடமையைச் செய்து கொண்டிரு.

கடவுள் அருள்புரிவார்.

உனது தந்தை

சாம்பசிவம்.

என்றிருந்த நீண்ட கடிதத்தை உணர்ச்சியுடன் படித்தான். இடையில் அவனது சிந்தை எங்கெங்கோ சென்றது. கடிதத்தில் தன்னைப் பற்றிய விஷயம் வரும்போது சிறிது தயங்கினன். அடுத்துவரும் சில வரிகளில் தனது வாழ்க்கை யடங்கி யிருப்பது கண்டு, அந்த வரிகளை ஒரு முறை வாய்க்குள்ளேயே படித்துப் பார்த்துக்கொண்டான். ஆம்! அவனது வாழ்வின் ஜீவன் அந்த வரிகளில் அடங்கியிருந்தது. அவனது வதனத்தில் ஒரு புதிய ஜோதி பரவியது. எல்லையற்ற மகிழ்ச்சியுடன் கடிதத்தை மேலே படித்து முடித்தான். முடித்ததும், ஒரு புதுவிஷயம் குறுக்கிட்டது. மற்றவையெல்லாம் அநுகூலந்தான். ஆனல், தந்தையின் பிரிவால் ஒருக்கால் கோகிலத்தின் அபிப்பிராயத்தில் ஏதேனும் மாற்றமேற்பட்டிருந்தால்? ..................................என்ற சந்தேகத்தோடு கோகிலத்தை எறிட்டுப் பார்த்தான்.

அநுகூலமோ—பிரதிகூலமோ, சந்தோஷமோ—துக்கமோ, எதையும் காணமுடியவில்லை.

யோசனை! ஆழ்ந்த யோசனை!! அது எதைப்பற்றியதாயிருக்கும்? தன்னைப்பற்றியது தானோ? இவ்வித பற்பல எண்ணங்களுடன் சில நிமிஷங்கள் நிசப்தமாய்க் கழிந்தன.

கவலை யென்பதையறியாதவள் தான் கோகிலம், தந்தையின் பிரிவு – இயற்கையின் சக்தி எங்கே போகும்?

தந்தையின் பிரிவால் கலங்கும் அவளுக்கு, ஆறுதலாக ஏதேனும் சொல்ல வேண்டுமென்று நினைத்தான்.

"கோகிலம்! மாமாவினுடைய நோக்கம் மிகமிகச் சிறந்தது. விரைவில் அவரும் வந்து நம்முடன் சேர்ந்து கொள்வா ரென்ற நம்பிக்கையிலே நமது மனதைச் சமாதானம் செய்து கொள்ளுவதைத் தவிர வேறென்ன செய்வது?"

"ஆம்! ஞானனந்தரிடம் செல்லும் அவர், ஏதாவது ஒரு வழியில் ஜன சமுதாயத்திற்கு உழைத்துக் கொண்டுதானிருப்பார். நிம்மதியாகச் சில காலமிருக்கட்டும்..........உம்...........ஏதோ முக்கிய விஷயமாய் வந்ததாகச் சொன்னீர்களே? மன்னிக்கவேண்டும்.... அடியோடு மறந்து விட்டேன்."

"மன்னிப்பெதற்கு? முக்கிய மில்லாத எதைப் பற்றிப் பேசினேம் இப்போது. எல்லாம் நமக்கு முக்

கியந்தான். சில காலமாக நகரத்திலே அரசாங்கத்தைக் கவிழ்ப்பதற்குச் சூழ்ச்சிகள் ஏதோ நடைபெற்று வருவதாகவும், அக்கூட்டத்தைக் கண்டுபிடிக்கும் வேலையிலீடுபடும்படியும், எனது தலைவர் எனக்குக் கட்டளை யிட்டிருக்கிறார். எனவே, ஆஸ்ரமத்தில் வகித்து வந்த ஆசிரியர் பதவியை ராஜீநாமாச் செய்யவேண்டியவனாக இருக்கிறேன்" என்றான்.

இந்த வார்த்தைகளைச் செவியுற்ற கோகிலம், விவரிக்க முடியாத சங்கட மடைந்தாள். தனது தந்தையும் தன்னை விட்டுப் பிரிந்து விட்டார். அன்றே தன் நேசனும் தன்னிடம் விடை பெற்றுக் கொள்ள வந்திருக்கிறான். இந்த நிலைமை அவளுக்கு எப்படி யிருக்கும்? எனினும், அவள் விவேகி. தனது அன்பன் மேற்கொள்ளும் வேலை எத்தகையதென்பதையும் யோசிக்காமலில்லை. அந்த நாட்டிலே அப்பொழுது, "சுதந்திரம் – சமத்துவம் – சகோதர தத்துவம்–" என்பன வற்றை அடிப்படையாகக் கொண்ட, குடியரசு அரசாங்கம் நடைபெற்று வந்தது. புதிதாக வகுக்கப் பட்ட அரசாங்கத் திட்டங்களால், தொழிலாளர்கள் – ஏழைகள், கஷ்டத்தையறிய முடியாத வகையிலே – அவர்கள் சோற்றுக்குக் கவலையில்லாது வாழ்வதற்கு ஏற்ற முறையிலே அமைந்திருந்தது. அந்தத் திட்டங்களால், இன்று கஷ்டப்படுவதாக – பாதகமடைவதாக நினைத்துக் கொண்டிருப்பவர்கள், ஒரு சில பெரும் பணக்காரர்கள் தான். இப்போது அரசாங்கத்தைக் கவிழ்ப்பதற்குச் சதி செய்பவர்களும் அவர்களாகவே

யிருக்கவேண்டும். அவர்கள் யாராயிருந்தாலும் சரி, நாட்டில் பெரும் பகுதியான மக்களின் கவலையற்ற—சந்தோஷகரமான வாழ்க்கைக்கு உலை வைப்பார்களே யாயின், அவர்களை இந்நாட்டினின்று ஒழிக்க வேண்டியது தான். அதற்கு உடனடியான நடவடிக்கையும் அவசியம் என்பதை யுணர்ந்து. "நமது நோக்கம் மக்கள் குலத்திற்குத் தொண்டு செய்வதுதான். அதை எவ்வழியில் செய்தாலென்ன? உங்கள் தொழிலைப் பற்றி எனக்கொன்றும் தெரியாது. ஆனல், ஒன்று அவ் விஷயத்தில் ஒரு பெண்ணினுடைய உதவி தேவை யிருக்குமாயின், இந்த ஏழைக்கு அந்த பாக்கியத்தைக் கொடுக்கவேண்டும். நம்மிடையே அடுத்த சந்திப்பு எப்பொழுதென்று சொல்லுவதற்கில்லை. இருந்தாலும், உங்களுடைய கடுமையான பல வேலைகளிடையேயும், பிருந்தாவனத்திலிருக்கும் இந்த அனுதையை மட்டும் மறந்து விடக்கூடாது." என்று கூறி, அவனுக்கு விடை கொடுக்கும் பாவனையாக இரு கரங்களையும் கூப்பி நமஸ்கரித்தாள். கண் கலங்கியது. ஆம்! பிரிவாற்ருமை என்னும் ஊற்றுநீர்! எவ்வளவு படித்த அறிவாளிகளாயினும், இந்த நிலையில் மனங் கலங்கியே தீருவர். அது மனித சுபாவம்!

"கோகிலம்! என் இதயத்துடன் ஒன்ருகி விட்ட ஒன்றை எங்ஙனம் மறப்பது? எனது வெற்றுடலுக்கு உயிராயிருக்கும் அம்மைை மறப்பதற்கு என்னுள்ளே அதைத்தவிர வேறென்ன யிருக்கிறது?

ஆனால் ஒன்று, நான் இப்போது மேற்கொள்ளும் வேலையில் கணக்கற்ற அபாயங்களிருக்கின்றன. அவ்வளவையும் எதிர்த்து வெற்றி பெறுவோம் என்ற திட நம்பிகையுமிருக்கிறது. இடையில் என் உயிருக்கு ஏதும் ஆபத்தில்லை யென்றால், நமது எண்ணமும் ஈடேறும். அவ்விதம் எனக்கு ஏதேனும் அபாயம் நேரிட்டு விட்டால், அதில் என்னால் முடிக்கவேண்டிய பாக்கி வேலையை நீ தைரியமாக முடிக்கவேண்டும். அதற்கு எனது தலைவரின் உதவி உனக்குக் கிடைக்கும்..........எனக்கு நேரமாகிறது. தலைவியிடம் எல்லா விபரங்களையும் சொன்னேன். ஆனால், இன்னும் விடை பெற்றுக்கொள்ளவில்லை. போகலாமா?" என்றான் தினகரன்.

"சந்தோஷம்! போவோமே" என்றாள் கோகிலம். இருவரும் காரியாலத்திற்குச் சென்றனர்.

இருவரையும் கண்ட தலைவி புன்சிரிப்புடன் வரவேற்று, கோகிலத்தைப் பார்த்து "கோகிலம்! பிருந்தாவன் வளர்ச்சிக்கு ரொம்ப உழைத்து வந்தான், என்னசெய்வது? அவனது வேலையோ ரொம்ப முக்கியமானது. ஆனால், அவனது வேலைகளிடையேயும் ஆஸ்ரமத்தைப் பற்றி ஞாபகமாகவே யிருப்பானென்று நம்புகிறேன்" என்றார்கள்.

தினகரன் இந்த உபசார வார்த்தைக்குப் பதில் சொல்லும் முறையிலும், விடைபெற்றுக் கொள்ளும் பாவனையிலும், கைகூப்பி "தாயே! ஆஸ்ரமத்தைப்

பற்றி பேசும்போது, அதன் சிறப்பு உங்களிருவரையும் சார்ந்ததே. இங்கே எனது தொண்டு ரொம்பக் குறைவு. எனினும், எப்போதும் நானிந்த ஆஸ்ரமத்தின் தொண்டன் தான். எனது வாழ்நாளிலே இதை மறப்பதற்கில்லை. சந்தர்ப்பங் கிடைக்கும் போதெல்லாம் இங்கு வந்து போகிறேன். ஒரு விஷயம், நானேன் இந்த ஆஸ்ரமத்தை விட்டு விலகுகிறேன் என்பது ரகஸ்யமா யிருக்கவேண்டும். நேரமாகிறது. நமஸ்காரம்! போய்வரட்டுமா?" எனக்கூறி அவர்களின் பதிலை எதிர் பார்த்தான்.

தலைவி, கண்களில் நீர்கலங்க "தினகரா! இவ்வளவு நாளும் இந்த ஆஸ்ரமத்திற்குச் செய்து வந்த உதவிக்கு எங்கள் மனமார்ந்த நன்றி. மீண்டும் உன்னுடைய வரவை ஒவ்வொரு நாளும் இந்த ஆஸ்ரமம் எதிர்பார்த்துக் கொண்டிருக்கும். நீ தலையிடும் வேலையில் உன் உயிருக்கு ஆபத்து ஒன்று மேற்படாமலிருக்க இறைவனை வேண்டுகிறோம். நீ போய்வா" எனக்கூறி விடை கொடுத்தார்கள்.

அவனும் வருத்தத்துடன் சென்றான். தலைவி வைத்த விழி வாங்காமல் அவனையே பார்த்துக் கொண்டிருந்தார்கள். அவனிடம் இவர்களுக்குள்ள பிரேமைதான் என்னே!

அவன் சென்றதும், அவன் பின்னே சென்ற இவ்விருவருடைய மனதையும் ஆஸ்ரமத்திற்குக் கொண்டுவர பல நிமிஷங்கள் பிடித்தன. எப்படியோ ஒரு

வழியாய்ச் சமாதானமடைந்து, கோகிலத்தைப் பார்த்து தலைவி. "கோகிலா! கட்டிட நிதி வசூல் எப்படியிருக்கிறது?" எனக்கேட்டார்கள்.

"இது வரை ஏழாயிரம் ரூபாய் வசூலாகியிருக்கிறது. இன்னும் இரண்டொருநாளில் நமது உத்தேசத்தொகை கிடைத்துவிடும். இன்றைக்குக் கூட இரண்டொருவரைப் போய்ப்பார்க்கவேண்டும். நான் வெளியே போய் வருகிறேனம்மா" எனப்பதிலளித்த வண்ணம் எழுந்து வெளியே சென்று விட்டாள்.

தனிமையிலிருந்த தலைவியின் வாயினின்று "எல்லாம் ஈசன் செயல்" என்ற வார்த்தைகள் தனிமையைக் கலைத்துக்கொண்டு வெளி வந்தன.

# அத்தியாயம் 3

## ரேகைசாஸ்திரி—கான்சாஹிப்.

சுமார் 15 வருஷங்களுக்குமுன், அரசாங்கத் துப்பு இலாகாத் தலைவர் சுந்தரமூர்த்தி எங்கோ வெளியேபோய் வீட்டுக்குத் திரும்பி வந்துகொண்டிருந்தபோது, வழியில்—நடுத்தெருவில் ஒரு சிறுவன் மயக்கம் போட்டு விழுந்து கிடந்தான். நல்ல வெயில். ஜனநடமாட்டம் அதிகமில்லை. அந்தப் பையனுடைய நிலைமையைப் பார்த்து அவனைத்தூக்கிக் கொண்டு போய் ஆஸ்பத்திரியில் சேர்த்தார். இடையில் இரண்டொரு முறை ஆஸ்பத்திரிக்குச் சென்று அவனைப் பார்த்து வந்தார். சிறுபையன். 12 வயதிருக்கும். நல்ல அழகு. வசீகரப் பார்வை. சுந்தரமூர்த்தி அவனிடம் அதிகப் பிரியங் கொண்டார். அவனுடைய ஊர்—பெயர், தாய்—தகப்பன் முதலியவைகள் பற்றி விசாரித்ததில் அவனுடைய தகப்பன் ஓர் குடிகாரனென்றும், குடித்துவிட்டு வந்து வீட்டில் ஆர்ப்பாட்டம் செய்துகொண்டிருந்தபோது, "ஏனப்பா இப்படிக் குடிச்சுட்டுச் சத்தம் போடுகிறாய்?" என்று கேட்டதற்கு அவன் தகப்பன் அதிக கோபங்கொண்டு அவனை அடித்துத் துரத்தி விட்டதாகவும், அடிபொறுக்க மாட்டாமல் இந்த ஊரை நோக்கி ஓடி வந்து கொண்டிருந்த போது, அடிபட்ட வலியாலும், பசியின் கொடுமையாலும், களைத்து மயங்கி விழுந்துவிட்டதாகவும் பதில் சொன்னான்.

உடம்பு பூரண குண மடைந்ததும், வீட்டுக்குப் போகிறாயா? எனக்கேட்டதற்கு, மறுபடி போனால்

தன் தகப்பன் தன்னைக் கொன்று போடுவாரென்றும், வயிற்றுக்குச் சோறு போட்டால், அவருடைய வீட்டிலேயே வேலை பார்ப்பதாகவும் சொன்னான். தேகம் நடுங்கியது. கண்ணீர் பெருகியது. சுந்தரமூர்த்தியின் மனங் குழைந்து. அவருக்குக் குழந்தையில்லை. ஊரிலுள்ள குழந்தைகளை யெல்லாம் அன்புடன் நோக்குவார், தூக்குவார், அவைகளுக்குத் தின்பண்டங்கள் வாங்கிக் கொடுப்பார். இவ்விதம் குழந்தைகளிடம் பற்றுக் கொண்ட அவரது மனம் இச்சிறுவனது வேண்டு கோளை எங்ஙனம் மறுக்கும்?

உடம்பு குணமடைந்ததும் தன் வீட்டுக்கு அழைத்து வந்தார். அவனுக்குப் போதிய கல்வியறிவைக் கொடுத்து நல்ல நிலைமைக்குக் கொண்டு வந்துவிட விரும்பி, அவ்விதமே செய்தார். அவனும் வெகு சுறுசுறுப்பாக தமிழ் – ஆங்கிலம் இரண்டு பாஷையிலும் தேர்ச்சி பெற்றான். அவனுடைய ஆழ்ந்து யோசிக்கும் தன்மையையும், சூட்சும அறிவையும், சுறுசுறுப்பையும் கண்டு வியந்து, தனது தொழிலிலே பழக்க நினைத்து, உருமாறும் கலையைக் கற்றுக்கொடுத்தார். அப்போது தான், கமலாதேவியார் பிருந்தாவனத்தை யாரம்பித்தார்கள். அதன் ஆரம்ப விழாவிற்கு இவனும் சுந்தரமூர்த்தியும் போயிருந்தனர். பிருந்தாவனத்தின் அமைப்பும் – அதன் நோக்கமும், மிகச்சிறந்ததெனக் கருதினான். அதோடு, கமலாதேவியின் தேஜோமயமான உருவம் இவனை ஆகர்ஷித்துவிட்டது. "இவர்கள் என் அன்னையாக இருந்தால்,

எனது பாக்கியத்திற் கிணையுண்டோ? சே! அதெப்படி! பெயர்—உருவம்—குணம்—செய்கை எல்லாம் மாற்றம்...... ..............இருக்காது. இருந்தாலும், எத்தனையோ ஏழை மக்கள் இவர்களை அன்னையாகக் கொள்ளும் பாக்கி யத்தை யடைந்திருக்கும் போது, எனக்கு மட்டும் கிட் டாதா? நானும் ஓர் அனுதை தானே — நானும் இந்த ஆஸ்ரமத்திலே சேர்ந்து என்னுலான தொண்டைச் செய்வேன்" என்ற தீர்மானத்திற்கு வந்தான். அவ னது மனம் அன்னையின் அன்பை நாடியலைந்தது.

அவனது எண்ணத்தை சுந்தரமூர்த்தி யிடம் சொன்ன போது, அவரும் இவனது ஜனோபகார நோக்கத்தைக் கண்டு, ஏதோ சில காலம் அங்கிருக் கட்டுமென நினைத்து, பிருந்தாவனத்தின் தலைவிக்கு ஓர் கடித மெழுதிக் கொடுத்து அனுப்பி வைத்தார்.

அன்றையிலிருந்து சுமார் 8 வருஷங்களாக பிருந்தாவனத்தின் வளர்ச்சிக்கு உழைத்து வந்தான். இடையிடையே சுந்தரமூர்த்தியிடம் உருமாறும் கலை யிலும் பயிற்சி பெற்று வந்தான். இன்று அவன்—தின கான் அரசாங்கத் துப்பு இலாக்காவினருள் ஒருவ னுகி விட்டான்.

பிருந்தாவனத்தில் எல்லோரிடத்திலும் விடை பெற்றுத் தன் தலைவரின் இல்லத்தை யடைந்தான். இவனுடைய வரவையே எதிர்பார்த்திருந்த சுந்தர மூர்த்தி இவனைக் கண்டதும்.

"தினகரா! வா இப்படியுட்கார். தலைவி என்ன சொன்னார்கள்? ரொம்ப வருத்தப் பட்டிருப்பார்களில்லியா?" எனக்கேட்டார்.

தினகரனும் அவருக்கெதிரில் கிடந்த நாற்காலியொன்றிலமர்ந்து. "வருத்தமில்லாமலா? இருந்தாலும், தடை சொல்லாமல் விடை கொடுத்தார்கள். இன்று கிடைத்த அரசாங்கக் குறிப்பை விவரிப்பதாகச் சொன்னீர்களே?"

"ஆமாம்! நமது இலாக்காவால் இதுவரைக் கண்டுபிடிக்க முடியாமலிருந்து வருகிற கேஸ். 25 வருஷங்களுக்கு முந்தியது. அந்தக்கேஸ் பற்றிய விஷயத்தை உனக்குச் சொல்லுகிறேன். நமது அரசராயிருந்து — இப்போது நமது குடியரசின் தலைவராயிருந்து வரும் ஜெயசிங்கர், பட்டத்திற்கு வந்தபோது நடந்தது.

ஜெயசிங்கருடைய தந்தை ஓர் பெண் பித்தர். உக்கிரமசிங்க னென்பவன் அரசாங்கத்தைத் தன் சர்வாதிகாரத்திற்குள் கொண்டுவர நினைத்து; அவனது கள்ள நட்பிற்குப் பாத்திரமா யிருந்த காந்தாமணிதேவி என்னும் ஓர் அரச குடும்பத்துப் பெண்ணை, அவருக்கு இரண்டாந்தாரமாக மண முடித்து வைத்தான். மணமான மறு வருஷமே, முதல் மனைவிக்கு ஓர் ஆண் குழந்தையும், உக்கிரமசிங்கனது கள்ள நட்பால் காந்தாமணிக்கு ஓர் ஆண் குழந்தையும் பிறந்தன. மூத்த மனைவிக்கு ஆண் குழந்தை யிருக்கும் போது

தங்கள் புதல்வனுக்கு அரசுரிமை கிடைக்காதென எங்கினர் உக்கிரமசிங்கனும் காந்தாமணியும் யோசித்தார்கள் பல நாட்கள். முடிவில் மூத்தாளின் குழந்தையைக் கொலை செய்து விடுவதென்ற கொடூர எண்ணங் கொண்டனர். இவர்களுடைய போக்கிலே சந்தேகங் கொண்ட பிரதானி — இன்று குடியரசின் முதல் மந்திரியாக யிருக்கும் தர்மசீலர்; மூத்தாளின் குழந்தையைக் காப்பாற்றி, அது இறந்து விட்டதென இவர்கள் நம்பும்படிச் செய்து விட்டார். இவர்களது கவலை யொழிந்தது. தங்கள் புதல்வனே பட்டத்திற் குடையவனென இறுமாந் திருந்தனர். அரசரும் காந்தாமணியின் கைப்பாவை யாகிவிட்டார். இவள் ஆட்டி வைத்தபடி ஆடிக்கொண்டிருந்தார். இவளின் புதல்வனும் அவன் தோழன் நஞ்சப்ப னென்பவனும் நாட்டில் செய்த அக்ரமங்கள் கொஞ்சமல்ல. நாட்டைச் சூறையாடினார்களென்று கூடச் சொல்லலாம். இவ்வித அக்ரமங்களிடையே பல வருஷங்கள் சென்றன. நாட்டில் எங்கு பார்த்தாலும், வறுமையும், பஞ்சமும், அதிருப்தியும் தோன்றின. அரசரும் தன் புதல்வனை வெறுத்தார், இதையறிந்த காந்தாமணி அரசரைக் கொலை செய்யவும் யத்தனித்தாள். நாடு ஜனப்புரட்சி கண்டு விடும் போலிருந்தது. தக்க சமயத்தில் பிரதானி தர்மசீலர், தம் அரசரின் மூத்த மனைவியின் புதல்வனை அதாவது நமது ஜெயசிங்கரை அழைத்து வந்து உண்மையை விளக்கி, ஜெயசிங்கருக்குப் பட்டம் சூட்டினார்.

ஜெயசிங்கர் ஏழைகளுடன் ஏழையாய் வளர்ந்தவர். அவர்களின் கஷ்ட நஷ்டங்களை யறிந்தவர். இவரும் அவர்களுடன் வாழ்ந்து அநுபவித்தவர். எனவே, பட்டத்திற்கு வந்த சில மாதங்களில் அரசாங்கத்தை குடியரசாக்கி மக்களிடம் ஒப்புவித்தார். நாட்டு மக்களின் விருப்பத்திற் கிணங்க இன்று குடியரசின் தலைவராக யிருந்து வருகிறார்.

காந்தாமணியும், அவள் புதல்வனும் தங்கள் தீவினையின் பயனை யநுபவிப்பதற்கு மேலுலகம் சென்று விட்டனர். உக்கிரம சிங்கனும் – நஞ்சப்பனும் பூவுலகில் சிறைச் சாலையில் அநுபவித்துக் கொண்டிருந்தனர்.

அவர்களை ஜெயிலில் போட்ட ஒரு மாதத்தில் அவ்விருவரும் எப்படியோ ஜெயிலிலிருந்து தப்பியோடி விட்டனர். வெளியிலிருந்த நஞ்சப்பனின் மனைவி செய்த வேலையாகத்தானிருக்குமிது. ஏனெனில், அன்றையிலிருந்து அவளையும் காணவில்லை. இது நடந்து இப்போது 25 வருஷங்களாகியும், இதுவரை இம்மூவரைப் பற்றி எந்த விபரமுங் கிடைக்கவில்லை. பழைய குப்பை இது. இதை இன்று முதன் மந்திரி தமது குறிப்பில் எடுத்துக் காட்டுகிறார்.

இரண்டாவதாக, நமது குடியரசின் சட்ட திட்டங்களை இடைவிடாது எதிர்த்து வந்த பிரபுக்கள் கூட்டம் கொஞ்ச நாளாக ஓய்ந்து கிடப்பதால், ரகசியத்தில் சூழ்ச்சிகள் ஏதேனும் நடந்து கொண்டிருக்க வேண்டுமென்று அநுமானிக்கிறார்கள்.

மூன்றாவதாக, பிரபுக்களில் இடைக்காலப் பிரபுவான காத்தவராயரைப் பற்றி — அவரது பூர்வீகத்தைப் பற்றி யறியும் படியும் கூறி யிருக்கிறார்கள். என்று குறிப்பிலுள்ள விஷயங்களை விரிவாகக் கூறினார்.

அவர் கூறியவற்றை அதிகக் கவனிப்புடன் கேட்டு வந்த தினகரன், "குறிப்பிலுள்ள மூன்று விஷயங்களும் ஒன்றுக்கொன்று சம்மந்த முடையதென்று நினைக்கிறார்களா?" எனக் கேட்டான்.

"உண்மையில் நமது மந்திரியின் நினைப்பு அதுதான். இப்போது நீ காத்தவராயரின் பூர்வீகத்தைத் தெரிந்து கொள்ள வேண்டும். பிரபுக்களில் எதிலும் முன்னணியில் நிற்பவர் காத்தவராயர். அந்தக் கூட்டத்தில் சதியாலோசனைகள் எதுவும் நடந்தால், அதிலும் காத்தவராயர் தலைமையான ஆளாகவே யிருப்பார். அப்படி ஏதேனும் நடைபெறுகிறதா வென்பதையும், கைதிகளான நஞ்சப்பன் உக்கிரமசிங்கன் இருவருமோ அன்றி இருவரில் ஒருவனோ உயிருடனிருந்தால், நமது குடியரசுத் தலைவர் மீது வஞ்சந் தீர்த்துக் கொள்ள நினைப்பது சகஜமாகையால், அவர்களுக்கும் இந்தப் பிரபுக்கள் கூட்டத்திற்கும் ஏதேனும் தொடர்பிருக்கிறதா வென்பதையும், நீ தெரிந்து கொள்ள வேண்டும். உன்னிடம் ஒப்புவிக்கப் பட்டிருக்கும் இந்தப் பெரிய காரியத்தை பொறுப்புடனும், தீர்க்காலோசனை யுடனும் செய்ய வேண்டும். தெரிகிறதா? இதில் என்னுடைய உதவி உனக்கு எப்

பொழுதும் கிடைக்கும்" என்று கூறினார் சுந்தர மூர்த்தி.

"உத்தரவு. எனது கடமையைச் சரிவரச் செய்து முடிக்கிறேன்" எனத் தலை வணங்கிக் கூறி எழுந்து தனது அறைக்குச் சென்று 15 நிமிஷங்களில் திரும்பி, ஆங்கில உடை, சிறிய தாடி, துருக்கித் தொப்பி முதலியவைகளணிந்த ஒரு முகமதியனாக வந்தான்.

அவனுடைய மாறு வேஷத்தைப் பார்த்து சிரித்துக் கொண்டே "ஏது இவ்வளவு சீக்கிரத்தில் சாகிபுவாகி விட்டாயே" என்றார்.

"வெறும் சாகிபு வல்ல, ரேகை சாஸ்திரி. உலகத்தைச் சுற்றிக் கொண்டு வருகிறார். இவருக்குப் பல பாஷைகள் தெரியும்"

"ஓ! குரல் கூட மாறி விட்டதே! அப்படியா!! யாருக்கு ரேகை பார்க்கப் புறப்பட்டீர் களிப்போது?

"எல்லோருக்கும் – எப்போதும் பார்ப்பேன். ஆனால், இப்போது காத்தவராயரின் மாளிகைக்குப் போகிறேன். அவருக்கு கல்யாண ஆசை பிடித்திருக்கிறது. ஆஸ்ரமத்தின் காரியதரிசி கோகிலத்தைக் கூட தமக்கு கல்யாணஞ் செய்து தரும்படி அவள் தந்தையைக் கேட்டாராம். அதனாலே, அங்கு போனால் நல்ல வேட்டை கிடைக்கு மல்லவா?"

"ஏதேது! காத்தவராயரா கல்யாணஞ் செய்து கொள்ளப் போகிறாராம்!! இந்த வயதிலேயா? அக்ரமம் அட பாவமே! சரிதான் சாஸ்திரிகளே!

நீங்கள் அங்கே போய் நல்ல பலனைக் கொண்டு வாருங்கள்!"

"இஷ்டப்படியே!" என்று கூறி அவ்விடம் விட்டுப் புறப்பிட்டார் ரேகை சாஸ்த்திரி. நகரத்தின் பல பாகங்களில் சுற்றி இரண்டொருவரைப் பார்த்துச் சிறிது நேரம் பேசிக் கொண்டிருந்தார். சரியாக பிற்பகல் 3 மணி யடிக்கும் சமயம்; காத்தவராய ரின் மாளிகையை யடைந்து, அங்கு நின்று கொண் டிருந்த ராயப்பனிடம்.

"எஜமான் உள்ளே யிருக்கிறுங்களா?" எனக் கேட்டான்.

"இருக்கிறுங்க........................ (சாஸ்திரியை உற்றுப் பார்த்துக் கொண்டே) நீங்க யாருங்க?"

"நான் ரேகை சாஸ்திரம் பார்ப்பவன் கைரே கையைப் பார்த்து நடந்துபோன – இப்போது நடக் கிற — இனி நடக்கப் போகிற – எல்லா விஷயங்களை யும் சொல்லுவேன்"

"அப்படி யுங்களா! கொஞ்சம் இருங்கோ உள்ளே போய் எஜமானை பார்த்துட்டு வர்ரேன்....உங்க பேரு...........................?"

"கான் சாகிபு...இதோ இந்தச் சீட்டை எஜ மானரிடம் கொடு" எனக்கூறி தனது பெயர் அச்சிட்ட சீட்டை அவனிடம் கொடுத்தார்.

அதை வாங்கிக் கொண்டு உள்ளே போன ராயப்பன், கொஞ்ச நேரத்தில் திரும்பி வந்து "எஜ

மான் தூங்கிருரு, இன்னும் அரைமணி நேரத்திற்குள் எழுந்துடுவாரு — இருக்கிறீங்களா? இல்லேன்னு பொயிட்டு அப்புறம் வாரிங்களா?" என்ருன்.

"அறைமணி நேரந்தானே. இருந்தே பார்த்துட் டுப் போரேன்" எனக் கூறிய வண்ணம் அங்கு கிடந்த நாற்காலியி லமர்ந்தான். ராயப்பனுக்கு தன் னதிர்ஷ்டத்தைக் கொஞ்சம் தெரிந்து கொள்ள வேண் மென்ற ஆசை பிறந்தது.

"சாஸ்திரியாரே! இப்போ சும்மா தானே உட் காந்திருக்கிங்க. என் கையைக் கொஞ்சம் பார்த்து சொல்லுங்களேன்!" எனக் கூறிக் கையை நீட்டினுன்.

ரேகை சாஸ்திரியும் அவன் வேண்டுகோளுக் கிசைந்து, கையைப் பிடித்து ரேகைகளை யெல்லாம் அதி யுன்னிப்பாய் கவனித்தான். அவனுடைய முகபா வங்கள் பல விதமாய் மாறின. முடிவில், ரேகையின் பலனைச் சொல்ல ஆரம்பித்தான்:

"உனக்கு வயது நாற்பதிருக்க வேண்டுமே?"

"என்னங்க அவ்வளவு நிச்சியமாய் சொல்லீட் டிங்களே! கையிலே எழுதி யிருக்குங்களா?"

"எழுதாமலா சொல்லுகிறேன். இது மட்டுமல்ல ரொம்ப விஷயங்கள் எழுதியிருக்கு. உம்....உனக்கொரு சகோதர னுண்டல்லவா?

"ஆமா....இருக்கிருனுங்க!"

"அவன் இப்போது உன்னோடு இல்லை"

"அடே! சரியா சொல்லுரீங்களே!! அந்தப் பையனிப்போ எங்கே யிருக்கிருன்னு சொல்ல முடியுங்களா?"

"சொல்லலாம், (ரேகையை மீண்டு மொருமுறை பார்த்து) அவன் உன்னை விட்டுப் போய் 10 வருஷங்களிருக்க வேண்டும். ஆனால், இப்போது உன்னிடம் வந்து கொண்டிருக்கிருன்."

நிசமாத் தானுங்களா! எப்போ அவனைப் பார்க்கலாங்க?

(வாயிக்குள்ளேயே கணக்குப் போட்டுப் பார்த்து) ரெம்பசீக்கிரம், அதுவும் நாளைக் காலையில் 10 மணிக்குள் உன்னிருப்பிடத்திற்கே வந்து விடுவான்........அவனுடைய பெயர் வீரப்பனல்லவா?

ராயப்பன் ரொம்ப ஆச்சரிய மடைந்தவனாய்,

"பேரு கூடச் சொல்லிட்டீங்களே!"

"எல்லாஞ் சொல்லுவேனே. இது கூடத் தெரியாவிட்டால் நானெப்படி ரேகை சாஸ்திரி யாகமுடியும். உலகம் முழுதும் சுற்றி ராஜாக்கள், மகாராஜாக்கள், பிரபுக்கள், ஜெமீந்தார்கள் எல்லோருக்கும் பலன் சொல்லி நற்சாக்ஷிப் பத்திரங்க ளெல்லாம் வாங்கி யிருக்கிறேனே........ (அவனுடைய கையை பார்த்த வண்ணம்) உன் தம்பிக்கு வயது 25 இருக்க வேண்டுமே — சரிதானு?"

ராயப்பன் கணக்குப் பார்த்து 'ஆமாங்க அவ்வளவு தானுங்க"

"இப்போது அவனுடைய உருவம் ரொம்ப தூரம் மாறியிருக்க வேண்டும். நீ அவனை அடையாளம் கண்டு பிடிப்பது கூட சிரமம்; அவன் உன்னைக் கண்டு கொள்ளுவான். அவன் கொஞ்சம் பணமும் சம்பாதித்துக் கொண்டு வருகிறான். யந்திரம் ஓட்டுவான்"

"அடே! அவ்வளவு கெட்டிக்காரனாயிட்டானுகளா!!

"ரொம்ப கெட்டிக்காரன்....உன் சகோதர பாவத்து அப்படியிருக்கிறது. இனிமேல் உன் சகோதரனை உன்னுடனேயே வைத்துக் கொண்டால், அவனால் உனக்குப் பெரிய அதிஷ்டமிருக்கிறது."

"நிசமாத்தான் சொல்லுரீங்களா?"

"பொய்யா சொல்லுகிறேன்? அவன் உன்னிடம் வந்து சேர்ந்த ஒரு மாதத்திற்குள் எல்லா வழியாலும் உனக்கு நன்மையுண்டாகும். அவன் உன்னை விட்டுப் பிரிந்தால், அதிஷ்டமும் அவன் கூடவே சென்று விடும். தெரிகிறதா? இது விஷயத்தில் நீ கவனிப்பாக யிருக்க வேண்டும்.

"அப்படியின்னு எஜமான் கிட்டே சொல்லி அவனுக்கும் இங்கேயே வேலை வாங்கிக் கொடுத்திடுரேனுங்க. அப்படி சேஞ்சுட்டா அவன் என் கூடவே தானே இருக்கணும்.

"நீ அதிஷ்டக் காரனப்பா! அப்படியே செய்து விடு" எனக் கூறி அவனை உற்சாகப் படுத்திக் கொண்டே தன் கைக்கெடிகாரத்தைப் பார்த்து,

"டயமாயிட்டுதே எஜமான் எழுந்துவிட்டார்களாவென்று பாரேன்" என்ருன்.

ராயப்பன் சென்று மீண்டும் வந்து "இல்லீங்களே! இன்னக்கி என்னமோ அப்படித் தூங்கிருருங்க" என்ருன் சலிப்புடன்.

"சரி. நான் இன்னும் சில பிரபுக்களைப் பார்க்க வேண்டும். அவர்களையெல்லாம் பார்த்துக் கொண்டு சாவதானமாய் இங்கே வருகிறேன்." எனக்கூறி எழுந்தான்.

"போயிட்டு நிச்சயமாய் வாங்கோ; எங்க எஜமானுக்கு இதிலே ரொம்ப பிரியம்."

"அப்படியா! நான் கண்டிப்பாய் வருகிறேன்" என்று சொல்லிக் கொண்டே வெளியே சென்ருர் ரேகை சாஸ்திரி கான் சாஹிப்.

ராயப்பன் சந்தோஷத்தால் பூரித்துப் போய்விட்டான். தன் சகோதரனுடைய அதிர்ஷ்டத்தால், தான் இப்பவே ஒரு பெரிய பணக்காரனுகி விட்டதாக நினைப்பு. பேச்சும் – நடையும் அப்படி மாறி விட்டன.



# அத்தியாயம் 4

## கல்யாண முயற்சியும் — கடுந்தோல்வியும்

மறு நாட்காலையில், அதி சீக்கிரமே எழுந்து விட்டான் ராயப்பன். சுறு சுறுப்புடன் வேலைகளை எல்லாம் முடித்துவிட்டு, ஓர் ஜெமீந்தாரைப் போல நடந்து சென்று மணியைப் பார்த்தான். 9 ஆகி யிருந்தது. இன்னும் ஒரு மணி நேரத்திற்குள், தனது சகோதரன் வந்து விடுவான் என்பதில் ஒருவித மகிழ்ச்சி — பல வருஷங்களுக்குப் பிறகு அவனைப் பார்ப்பதில் ஒருவித மனக் கிளர்ச்சி. அதுவும், அவனால் தனக்குப் பெரிய அதிர்ஷ்டம் வரப்போவதாக எண்ணும்போது..........எங்கிருந்தோ சகோதர வாஞ்சையும் வந்து புகுந்து கொண்டது. ஒவ்வொரு நிமிஷமும் ஆவலுடன் எதிர்பார்த்தான் தன் சகோதரனை. இல்லை—அதிர்ஷ்டத்தை. மணி 10 அடித்து விட்டது. அவன்மட்டும் வந்தபாடில்லை. ரேகைசாஸ்திரியிடம் கொஞ்சம் அவ நம்பிக்கையு மேற்பட்டது. நேரம் ஆக ஆக அவனுடைய மனதை என்னவோ செய்ய ஆரம்பித்தது. எழுந்தான் — நடந்தான் — திரும்பிவந்து உட்கார்ந்தான். ஆவல் அதிகரிக்கவே, மனம் ஒரு நிலையிலில்லை. "திருட்டுப்பயல் வரட்டும் ஒரே யடியில் அடித்துத் துரத்தி விடுகிறேன்" என்று சொல்லிக்கொண்டான். அவ்வளவு கோபம் அந்த ரேகை சாஸ்திரிமீது. இப்படியாக அவன் அவதிப்பட்டுக் கொண்டிருந்த போது, ஒரு ஜட்காவண்டி வந்து வாசலில் நின்றது.

அதிலிருந்து சுமார் 25 வயது மதிக்கத்தக்க வாலிப ஞெருவன் கீழே யிறங்கினன். மாளிகையின் பெயரை ஒருமுறை பார்த்துவிட்டு உள்ளே வந்தான். இவனைப் பார்த்ததும் ராயப்பன், தன் சகோதரன் இவனுக இருப்பானே எனச் சந்தேகித்தான். எதிரே வரும் உருவத்திற்கும் தன் சகோதரனின் உருவத்திற்கும் ரெம்பதூரம் வேறுபாடிருக்கக் கண்டான். இருப்பி னும், ரேகைசாஸ்திரி "உன் சகோதரனின் உருவம் ரொம்ப மாறியிருக்கும்" என்று சொன்னதும் ஞாபக த்திற்கு வந்தது. இவ்விதம் இவன் யோசித்துக் கொண் டிருந்தபோது, அந்த வாலிபன் இவன் சமீபம் வந்து கூர்ந்து இவனைப்பார்த்து, "அண்ணு!" வென்றலறிய வண்ணம் அவனைக்கட்டிப் பிடித்துக் கொண்டான். அவன்தான் தன் சகோதரனெனக் கண்டதும், சகோதர வாஞ்சையால் பிணைப்புண்டு "தம்பி வீரப்பா!" வென்றலறியவனுய் அவனைச் சேர்த்தணைத் துக் கொண்டான்.

இந்தக்காக்ஷி கண்களுக்கு விருந்தாயிருந்தது ஒரு சில நிமிஷங்கள்.

ராயப்பன் தன் சகோதரனை தடவிக் கொடுத்துக் கொண்டே "தம்பி! அடையாளமே தெரியவியே? குடுமியைக் காணும்! மீசை புதிசாயிருக்கு!! ரொம்ப வளர்ந்து போயிட்டே! இத்தனை வருஷமாய் எந்த ஊரிலே யிருந்தே?!" எனப் பல கேள்விகளைக் கேட் டான்.

"அண்ணு! நான் இங்கே யிருந்து நேரே பட்டணத்துக்குப்போனேன். அங்கே மலாயா தேச ரப்பர் தோட்டத்துக்கு கூலி எடுக்கிருங்கண்ணு சொன்ஞங்க. நானு அதிலே போய்ச் சேர்ந்தேன். வயசு குறைச்சலுண்ணு சொல்லீட்டாங்க, ஏற்கனவே சேர்ந்திருந்த ஒருத்தனுடைய மகன்னு சொல்லிக் கொண்டு கப்பலேறி மலாய் தேசத்துக்குப் போனேன். ஒரு பெரிய ரப்பர் தோட்டத்திலே வேலை. முதல்லே கொஞ்சநாள் தோட்டத்திலே வேலை பார்த்தேன். தோட்டத்து துரைக்கு என் மேலே ரொம்ப இஷ்டம். அவர் தன் பங்களாவிலே வேலை கொடுத்தார். தொரை விட்டிலே வேலை பார்க்கிறதின்ஞ நாகரீகமா யிருக்கணுமா யில்லையா? அதிஞலே, குடுமியை எடுத்து கிராப்பு வச்சிக்கிட்டேன். அதோடே மீசையும் வச்சுப் பார்த்தேன். தொரையுடைய கார் ட்ரைவர் கிட்டே எழுதப் படிக்கவும், கார் ஓட்டவும், இயந்திர வேலையும் கற்றுக் கொண்டேன். தொரைக்கு கொஞ்ச நாள் கார் ஓட்டினேன். தோட்டத்து எலெக்ட்ரிக் மிஷின் ட்ரைவராக கொஞ்ச நாளிருந்தேன். தொரை பென்ஷன் வாங்கிக்கொண்டு ஊருக்குப் புறப்பட்டார். நானும் ஊருக்குப் போக வேண்டுமென்று சொன்னேன். எனக்கு 1000 ரூபாய் சன்மானம் கொடுத்து என்னை யனுப்பிஞர்" என்று தன் கதையைச் சொல்லி, மேலும் "அண்ணு! நேற்றைக்கு பட்டணம் வந்து சேர்ந்தேன். உடனே உன்னைப் பார்க்க வேணுமென்ற ஆசை. ராத்திரியே

அங்கிருந்து புறப்பட்டுவிட்டேன். காலையில் இங்கு வந்து சேர்ந்தேன். உன்னைப்பற்றி விசாரித்ததில் இந்தப் பங்களாவிலே வேலை பார்ப்பதாகச் சொன்னார்கள். அதினாலே தான் இவ்வளவு நேரம். எத்தனை வருஷமாய் இங்கே வேலை செய்யிரே அண்ணா? முதலாளிக்கு உன்கிட்டே இஷ்டந்தானா? என ஆவலுடன் கேட்டான்.

தன்னைத் தேடிக் கண்டுபிடிப்பதில் தானிவ்வளவு தாமதமென்று சொன்னதும், ரேகைசாஸ்திரி மீது அவனுக்கிருந்த கோபம் மாறியது. அவனிடம் அதிக பிரியமும் கொண்டான்.

"தம்பி! ஏதோ கடவுள் கிருபையால் இத்தனை வருஷங்களுக்கப்புறமாவது சந்திச்சோமே அதுவே போதும். நான் இங்கே 8 வருஷமாக வேலை பார்க்கிறேன். இனிமேல் எனக்குத் தெரியாமே நீ எங்கேயும் போகப்படாது தெரியுமா? இங்கே எஜமான் எங்கிட்டே ரொம்ப பிரியம். இங்கே கூட ஒரு கார் ட்ரைவர் வேண்டியதிருக்கு. எஜமான் கிட்டே சொல்லி அந்த வேலையை உனக்கே வாங்கித் தந்துடுறேன். கவலையில்லாமல் ரெண்டு பேரும் இங்கேயேயிருக்கலாம்" என்று சொல்லி வாய்மூடு முன்,

"ராயப்பா!" எனக் காத்தவராயர் கூப்பிடுவதைக்கேட்டு

"தம்பி! இங்கேயேயிரு, எஜமான் கூப்பிடுராங்க கேட்டுட்டுவர்ரேன்" என்று சொல்லிக் கொண்டே எழுந்து உள்ளேயோடினான்.

படித்தவர்களும் — அறிவாளிகளும் கூட ரேகை சாஸ்திரியென்றும் — ஜோஸ்யரென்றும் சொல்லிக் கொண்டு வரும் மனிதர்களிடம் தங்கள் மனதைப்பறி கொடுத்து அவதிப்படும் போது, ராயப்பனைப் போன்ற ஓர் சாதாரண மனிதன் தன்னை எதிர்நோக்கி வரும் நலன்களுக்காக எதுதான் செய்ய மாட்டான்!

ராயப்பனின் தீர்க்காலோசனையற்ற மண்டைக்கு ரேகைசாஸ்திரி தினகரனின் திருஷ்டி என்பதும், வீரப்பன் ரேகை சாஸ்திரியின் மாறுருவமென்பதும் எங்ஙனம் புலப்படும்.

ராயப்பனின் ஆசையும், ஆர்வமும் வீரப்பனுக்கு சிரிப்பை மூட்டியது. இவனுடைய பேராசையை எண்ணி மனமிரங்கினான்.

உள்ளே சென்றிருந்த ராயப்பன் குதூகலத்துடன் திரும்பி வந்து "தம்பி! உன்னைப்பத்தி எஜமான் கிட்ட சொன்னேன், ரொம்ப ஆச்சரியமாய் கேட்டாரு. காரெல்லாம் ஓட்டுவாயின்னும் சொன்னேன். அப்படியின்னா இங்கேயே யிருக்கட்டு முன்னு சொல்லீட்டாங்க. உன்னை அப்புறம் பார்க்கிறேன்னு கூடச் சொன்னாங்க" என்றான் எல்லையற்ற மகிழ்ச்சியுடன்.

அப்போது பிருந்தாவனத்தின் தலைவி — கமலா தேவி அங்கே வந்தார்கள். அவர்களைப் பார்த்ததும் ராயப்பன் "வாங்கம்மா! உங்களைப்பத்தி எஜமான் இப்பக்கூடக் கேட்டாங்க. வாங்க அவங்க அறைக்

குப்போகலாம் என்று சொல்லி யவர்களை காத்தவ ராயரின் அறைக்கு அழைத்துச்சென்றான்.

இந்த இடத்தில் அவர்களைக் கண்டதும் வீரப்பன் ஆச்சரியமடைந்தான். எங்கும், எதைக் கருதியும், ஆஸ்ரமத்தை விட்டு வெளியே போகப் பிரியப்படாத தலைவி, இங்கு வரக் காரண மென்ன? அவர்களுக்கும் காத்தவராயருக்கும் என்ன சம்மந்த மிருக்கமுடியும்..........உம்...........இதில் ஏதோ விஷய மிருக்க வேண்டுமென எண்ணி அவர்களின் சம்பா ஷணையை அறிய ஆவல் கொண்டவனாய், தலைவியை காத்தவராயரின் அறையில் விட்டுத் திரும்பிய ராயப் பனிடம் தனக்கு உடம்புக்கு ரொம்ப அசதியாயிருப் பதாயும் குளிப்பதற்கு வெந்நீர் வைத்துத்தரும்படி யும் கேட்க அவனும் வெந்நீர் போட்டுக் கொண்டு கூப்பிடுவதாகச்சொல்லி அடுக்களைப் பக்கம் சென்றான்.

அவன் சென்றதும் வீரப்பன், காத்தவராய ரின் அறைக்கதவின் சமீபம் ஒட்டி நின்று கொண்டு உள்ளே நடக்கும் சம்பாஷணையைக் காது கொடுத் துக் கேட்டான்.

இனி உள்ளே நடப்பதைப் பார்ப்போம்.

வெண்மையான தூய ஆடையும், கழுத்தில் உருத்ராக்ஷ மாலையு மணிந்து சாந்தமும் — தூய்மையும், எளிமையும் — உண்மையுமான ஓர் உருவமும், எதிரே கோபமும் — கொடூரமும், வஞ்சனையும் — ஆடம்பரமு மான மற்றோர் உருவமும் — தனது வாழ்நாளை பணத்

திற்கும், ஆடம்பரத்திற்கும், சுகபோக வாழ்க்கைக் கும் தியாகஞ் செய்து விட்ட ஓர் பிரகிருதிக்கு முன், வாழ்க்கையை ஏழை எளியவர்களுக்காகத் தியாகஞ் செய்திருக்கும் ஓர் ஆஸ்ரம வாசியா தலை கவிழ்ந்து நிற்பது? வெளியுலகம் என்ன நினைக்கும்?............... பொய்யை மெய்யெனவும், மெய்யைப் பொய்யென வும் நம்பும் இந்த சீர்கெட்ட உலகத்திற்கு, அன்பு ணர்ச்சியை — அறிவுணர்ச்சியை — சகோதர உணர்ச்சியை ஊட்டி வரும் அவர்கள் ஏன் அஞ்ச வேண்டும்?............அவ்வித மெனில், இவர்கள் சந்திப் பின் நோக்கந்தா னென்ன? அதையும் சற்று பொறுத் திருந்து பார்த்துவிடுவோம்.

அறைக்குள் வந்த தலைவி ஒருபுறமாக ஒதுங்கி நின்று கொண்டிருந்தார்கள்.

காத்தவாராயர் "தர்மாம்பாள்! சௌக்கியந்தானா?" என்றார் பரிவுடன்.

"தர்மாம்பாள்...................அப்படி யொரு பெண் இன்னும் உலகிலிருக்கிறாளா?"

"அப்படியானால், பாக்கியம் உலகிலிருக்கிறா ளல்லவா?"

"அவளுமில்லை, இப்போது உலகில் புத்துயிர் பெற்று வந்திருக்கும் கமலா!"

"சரிதான் கமலா! ஆஸ்ரமம் எப்படி நடை பெறுகிறது?"

"ஏதோ............நல்லபடியாய் நடைபெறுகிறது."

"ஏன் நின்று கொண்டே யிருக்கிறாய்? இப்படி

யுட்காருகிறது தானே.'' எனக்கூறி ஓர் நாற்காலியை அவர்கள் சமீபம் இழுத்துப் போட்டார்.

"பரவாயில்லை..................எதுக்கு இந்த உபசார மெல்லாம்?",

"நீ முன்னையைப் போலவா யிருக்கிறாய்? இப்போது அரசர் முதல் ஆண்டிவரை உன்னைக் கொண்டாடுகிறார்கள். அப்படியிருக்க நான் மதியா திருக்கலாமா?''

"நீங்கள் தானென்ன குறைந்திருக்கிறீர்கள்? இப்போது இந்த நகரத்தின் பிரபுக்களில் பிரபல்யம் வாய்ந்தவர்கள். ஓர் பிரபுவிற்கு என்னைப்போல் ஓர் சாதாரண மனுஷி கொடுக்க வேண்டிய மரியாதை தானிது. உங்களுக் கென்ன, வேலைக்காரர்களிருக்கிறார்கள். வேலைகள் தானாகவே நடைபெறும். நானப்படியல்ல. எனக்கு வேலை அதிகமிருக்கிறது. என்னைக் கூப்பிட்டனுப்பியதின் காரண மென்ன வென்பதைச் சொல்லுங்கள்.''

"காரண மொன்றும் பிரமாதமில்லை. ஒரு சின்ன விஷயம்..............''

"நீங்கள் சின்னதாகக் கருதும் விஷயம் எப்படியிருக்குமென்று எனக்குத் தெரியாதா?''

"அப்படி யெல்லாமில்லை நீ பயப்படாதே''

"உங்களைப்பற்றி எனக்கென்ன பயம்?''

"என்னைப்பற்றி யல்ல, நான் சொல்லப்போகும் விஷயத்தைப்பற்றி''.

"அதுதான் சொன்னேனே, உங்களைப்பற்றியே பயமில்லை யென்று"

"என்னைப்பற்றிப் பயப்படுவதற்கு நானென்ன புலியா? சிங்கமா?"

"பழகப்பழக அவைகளிடமுள்ள பயமும் தெளிந்து விடாதா?"

"தெளிந்ததினாலேயே இவ்வளவும் பேசுகிறாய்?"

"தெளிந்ததோடல்ல, பல தெரிந்துங் கொண்டேன்?"

"அதனால்தான் உன்னை யழைத்து வரச் சொன்னேன்."

"சரிதான்........(யோசித்தவாறு) விஷயமென்ன?"

"விஷயமென்ன, நீ கூடக்கேள்விப் பட்டிருக்கலாம். நான் முன் போலவா யிருக்கிறேன்? இப்பொழுது எவ்வளவோ திருந்தி விட்டேன். பணக்காரனாகி விட்டது மட்டுமல்ல, அதற்கேற்ற கௌரவத்துடனுமிருந்து வருகிறேன். என் கண்மணி! பாவம்.......அவனிருந்திருந்தால், எனக்கு இந்த நினைப்பே வந்திருக்காது. என்ன செய்வது? எல்லாம் கால வித்தியாசம். நடந்துபோன விஷயங்களை நினைப்பதால் என்ன பயன்? எனக்கு ஏராளமான பணம், சொத்துப்பத்தெல்லா மிருக்கிறது. என்ன யிருந்து மென்ன? ஓர் பிள்ளை யில்லையே என்ற குறை என் மனதை அரிக்கிறது. என் ஜாதகத்திலே, கல்யாணஞ் செய்துகொள்வதற்கும்; செய்து கொண்டால், ஆண் சந்ததிக்கும் இடமிருப்பதாகச் சொல்லுகிறார்கள். அதினாலே ஒரு

கல்யாணத்தைத்தான் செய்து வைப்போமா என்று நினைத்தேன்."

"நல்ல நினைப்பு"

"நானே அப்படியாகி விட்ட பிறகு என் நினைப்பும் அப்படித் தானே யிருக்கும். அதனால் தான் இத்தனை வருஷங்களுக் கப்புறம் கல்யாணஞ் செய்து கொள்ள நினைக்கிறபோது; நல்ல பெண்ணாக — கௌரவமான குடும்பத்துப் பெண்ணாகப் பார்க்க வேண்டிய அவசிய மேற்பட்டது. அப்படிப் பார்த்ததில் ஒன்றும் சரிப்பட்டு வரவில்லை. எப்படியிருந்தாலும் நான் ஆண் பிள்ளை தானே...............?"

"அதற்காக ஒரு பெண்பிள்ளையைத் தேடினீர்களாக்கும் தாகு வேலைக்கு"

"கல்யாண விஷயத்தில் அந்த வார்த்தைக்கு கீழ்த்தரமான அர்த்தத்தைக் கொடுக்கக் கூடாது. அதற்காக நீ எங்கேயும் வெளியே போய்த் தேடியலைய வேண்டியது மில்லை. உன்னுடனிருக்கும் சாம்பசிவத்தின் மகள் கோகிலத்தைப் பற்றி உன் சம்மதம் கேள்ப்பதற்காகவே, உன்னை வரவழைத்தேன்."

"ஹூம்.........ம்.........கோகிலத்தைப் பற்றி என் சம்மதமா!...........வேடிக்கை தான்!!........சாம்பசிவம் அல்லது அந்தப் பெண் சம்மதமல்லவா கேட்க வேண்டும்?"

"நீ சொன்னால் அவன் தட்டியா சொல்லப் போகிறான்? அல்லது அந்தப் பெண் தான் ஒத்துக் கொள்ள மாட்டாளா?"

"அவள் என்னிடம் வேலை செய்வதற்காக பெற்ற தகப்பனுக்குள்ள உரிமையோ, அல்லது பெண் ணுக்குள்ள உரிமையோ, எனக்கு வந்து விடுமா?"

"வருகிறதென்ன? எல்லாம் உன்னிடமே யிருக் கிறது. அந்தக் குடும்பத்தில் நீ எது வேண்டுமானாலும் செய்யலாம் என்பது தெரிந்து தான் உன்னைக் கேட் கிறேன்."

ரொம்ப சரி. அவ்வளவு தெரிந்து கொண்டதே போதும். நான் போய் வருகிறேன் "எனக்கூறி சட் டென்று திரும்பினார்கள்.

நான் கேட்டதற்குப் பதில் சொல்லாமே புறப் பிட்டியே" என்று அவரும் எழுந்து பின் தொடர்ந் தார்.

தலைவி திரும்பி "அவளுடைய நன்மையையே கோரும் நான், அவளுக்கு இவ்வளவு பெரிய கேட் டை விளைவிக்க முடியாது"

"என்ன?...........கேடா! கல்யாண விஷயம் ஒரு கேடாகுமா?"

"ஆம்! கேடு தான், அவளுடைய வாழ்வை நாச மாக்கும் பெருங்கேடு, 18 வயதுப் பெண்ணை 60 வய துக் கிழவனுக்கு – அதுவும் உமக்கு கல்யாணஞ் செய் வதால் என்ன ஏற்படும்? அப் பெண்ணுடைய வாழ்க் கை என்னவாகும்?"

"கமலா! வீணுப் கெடுக்காதே. கல்யாண விஷ யம். அந்தக்காலத்திலே உன் அபிப்பிராயத்திற் கிணங் கியதை மறந்து விட்டாயா?"

"அப்படியொரு நிர்ப்பந்த மேற்பட்டது"

"சரி அதுவும் போகட்டும். இது விஷயத்தில், உன்னை எதற்காக அழைத்துக் கேட்கிறேன் என்பது தெரியுமா?"

"ஏன் தெரியாது? அவள் என்னிட மிருப்பதினுல் தான்"

"உண்மை! அதனுலேயே மறுபடியும் உன்னை நயந்து கேட்கிறேன்"

"எப்படிக் கேட்டாலும் விஷயம் ஒன்று தான். இது விஷயத்தை நீங்கள் அறவே மறந்து விடவேண்டும்"

"கமலா?............நான் மறப்பதும் – நீ மறுப்பதும் முடியாதென்பதை சீக்கிரம் உணர்வாய்" என்ருர் அதிக கோபத்துடன்.

"எல்லாம் அவனருள்ப்படி நடக்கும்" என்று சொல்லிய வண்ணம் தலைவி வெளியே சென்று விட்டார்கள். இறுதியாகத் தலைவியின் மூலம் கோகிலத்தை யடைந்து விடலாமென்றும் முயன்று பார்த்தார். அதுவும் வீணுயிற்று. எவ்வளவு பெரிய தோல்வி!

# அத்தியாயம் 5

## புலி வாயில் — பெண் மானு!

மனிதனுக்கு ஆத்திரம் மிகைப்படும் போது அவன் சிந்தனு சக்தியை இழந்து விடுகிறுன். எது நல்லது — எது கெட்டது என்பதைக் கூட அவனுல் அறிய முடிவதில்லை. எந்த விஷயத்தில் அவனுக்கு ஆத்திர மேற்படுகிறதோ, அந்த விஷயம் ஒன்றைத் தவிர பிற, அவனது மூளையிலிடம் பெறுவதில்லை. எவ்விதமும் தான் எண்ணிய காரியத்தை முடித்தே தீருவதென வைராக்யமுங் கொண்டு விடுகிறுன். அதே போன்று, நமது காத்தவராயரும் தமது மனதைக் கோபாக்கினியிலிட்டு புழுவெனத் துடித்துக் கொண்டிருக்கிறுர். யார் மறுத்தாலும், உலகமே தலைகீழாய்க் கவிழ்ந்தாலும், கோகிலத்தை யடைந்தே தீருவதென வைராக்யம் கொண்டார். ஒருவனின் அழிவிற்குத் தான் இவ்விதமான கெட்ட யோசனைகள் — எண்ணங்கள் — தோன்றுமென்பார்கள். இவருக்கும் அழிவு காலம் கிட்டி விட்டதோ என்னவோ?

அடியுண்ட சிங்கம் போன்று அங்கு மிங்கு முலாவிக் கொண்டிருந்தார். அப்போது சப்தமின்றி அந்த அறைக்குள் வந்த ராயப்பன், சிறிது நின்று இவரைக் கவனித்தான். இவருடைய நிலைமையைக் கண்டு அஞ்சினுன். இருந்தாலும், எந்த இடத்திலும் — எந்த சந்தர்ப்பத்திலும் — எந்த நேரத்திலும் இவரிடம் பேசப் — பழக உரிமை யுடையவனல்லவா? எனவே "எஜமான்!" என்றுன் மெதுவாக.

இந்த சப்தத்தைக் கேட்டவுடன் நரசிம்ம மூர்த்தியாகி விட்டார் காத்தவராயர். "இவ்வளவு நேரம் சிரமப்பட்டு இந்த விஷயத்திற்கு ஓர் முடிவு கொண்டு வரும் சமயத்தில், பாவிப் பயல் அநியாயமாய்க் கெடுத்து விட்டானே" என ஆத்திரங் கொண்டவராய், அவனை உருட்டி விழித்து ஒரு பார்வை பார்த்து "மட்டிப் பயல்! சமயந்தெரியாமல் வந்து பிராணனை வாங்குகிறான் என்னடாது?" என்றார் தமது கர்த்தவ கானத்தில்.

உண்மையிலேயே இந்த அவதாரத்தைக் கண்டு பயந்து விட்டான். எனினும், காத்தவராயரைக் கண்டறிந்தவனல்லவா?

"உங்க சமயந் தெரியாமே வருவேனுங்களா? காரியமாய்த் தான் வந்திருக்கேன். இதோ இந்தக் கடதாசியைப் பார்த்தாத் தெரியுங்க" என்று சொல்லி ஒரு கடிதத் துண்டைக் கொடுத்தான். அவரதை வெடுக்கெனப் பிடுங்கிப் பார்த்தார். ஒரு முறை வாய்க்குள்ளேயே படித்துப் பார்த்தார். அதிலும் அவருக்குத் திருப்தி யில்லை போல் தோன்றியது – மேஜை மீது கிடந்த மூக்குக் கண்ணாடியை எடுத்துப் போட்டுக் கொண்டு ஒரு முறை அதைப் படித்தார். அவருடைய நரசிம்ம அவதாரம் எங்கோ ஓடி ஒழிந்து கொண்டது. என்ன சந்தோஷம்! அதைத் தொடர்ந்தே ஒரு மந்தகாசம்!! ஒரு கர்வக்களைப்பு; அடடா! அவர் முகத் தோற்றம் எத்தனை விதமாய் மாறியது. அவர் நடையிலே என்ன ஒய்யாரம்! கடைசியாக

ஒரு முறை அக்கடிதத்தைப் பார்த்து விட்டு "கோகிலம்! பிருந்தாவனத்தின் காரியதரிசி!! சபாஷ்!!!" என்றார் ஓர் பேய்ச் சிரிப்புடன்.

"ஆமாங்க! அந்தக் குயில் தானுங்க" என்றான் ராயப்பன் சமயமறிந்து.

"டேய் ஜாக்கிரதை என்னடா குயில்?"

"இல்லீங்க அவங்க பேசுர போது அந்த சத்தம் அப்படித் தானிருந்ததுங்க"

"பேஷ்! அப்படிச் சொல்லு. குரலே அப்படி யிருந்ததா? இதற்கெல்லாம் குடுத்து வைத்திருக் கணும்டா"

"இல்லீங்களா! ஐயா இருக்கிறாங் களாண்ணு கேட்டாங்க அடடா! வீணைத்தந்தி பேசுரது மாதிரி இருந்ததுங்களே."

"முட்டாள்! நானென்று சொன்னால் இவனென்று சொல்லுகிறான். நீ போய் அந்தம்மாளை இங்கு கொண்டு வந்து விட்டு விட்டுப்போ" என்று உத்தரவிட்டார்.

புலி வாயில் பெண் மானு! தந்தை தனது கடிதத்தில் எச்சரித் திருந்தும் இந்த முரடன் வீட்டுக்கு வலியவரும் கோகிலத்தின் மனேநிடம் எத்தகையதா யிருக்க வேண்டும்.

அவரது அறைக்கு வந்த கோகிலம் வழக்கப்படி நமஸ்காரம் செய்தாள்.

காத்தவராயர் அவளை அன்புடன் நோக்கி,

"வாம்மா! இப்படி உட்கார்" எனப் பரிவுடன் கூறினர்.

கோகிலம் அங்கு கிடந்த நாற்காலி யொன்றி லமர்ந்து,

"ஒரு தர்ம காரியமாய் உங்களைப் பார்த்துப் போகலா மென்று வந்தேன்" என்றாள்.

"அப்படியா! அதுவும் ஓர் நல்ல காரியமாய்த்தா னிருக்கும்"

"உயர்ந்த காரியம், ரொம்ப அவசிய மானதுங் கூட. எங்களாஸ்ரமத்தில் புதிதாகச் சேருகிற தொழி லாளர்களுக்கு கட்டிட வசதி யில்லாதிருக்கிறது. அந்த வசதி மட்டு மிருந்தால், ஏராளமான தொழிலாளர் களுக்கு வேலை கொடுக்கலாம். எனவே, பதினாயிரம் ரூபாய் செலவில் கட்டிடம் கட்ட முடிவு செய்து, உங்களைப் போன்ற கனவான்களின் உதவியை நாடி னோம். இதுவரை பலரும் பெருந்தொகை தந்துதவி யிருக்கிறார்கள், மொத்தம் ஏழாயிரம் ரூபாய் இது வரைச் சேர்ந்திருக்கிறது. இன்னும் மூவாயிரந்தான் பாக்கி. இதோ நன்கொடை லிஸ்ட்டிருக்கிறது பாருங் கள். (தன்னிட மிருந்த லிஸ்ட்டை அவரிடம் கொடு த்து) பாக்கித் தொகை முழுமையும் உங்களிட மிருந் தே எதிர்பார்க்கிறேன்" என்றாள்.

அந்த லிஸ்ட்டைப் பார்த்துக் கொண்டே,

"நல்ல விஷயந்தான்! எனது நண்பர்களெல்லாம் ஏராளமாகக் கொடுத்திருக்கிறார்கள். அதோடு, இந்த சொற்ப தொகைக்காக நீயே இவ்வளவு தூரம் வந்தி ருக்கும் போது, நான் ஏதாவது மறுத்துச் சொல்ல வோ, தொகையில் தான் குறைக்கவோ முடியுமா? சரி

ரூபாய் மூவாயிரத்திற்கு ஒரு செக் தருகிறேன் அவ்வளவு தானே" என்றார்.

தன்னிடம் கடன் வாங்கியவர்களிடம் ஒரு ரூபாய்க்கும் மணிக் கணக்காகப் பேசும் இவர் — அவர்களுடைய வட்டியில் ஒரு தம்பிடி கூட விட்டுக் கொடுக்க மனமிரங்காத இவர், அதிகப் பேச்சுக் கிடமின்றியும், கோகிலம் ப்ரம்மிப் படையும் படியும் ரூபாய் மூவாயிரம் கொடுப்பதாகச் சொன்னது எந்த நோக்கங் கொண்டு! அவள் தன்னை பெருந்தன்மை யுடையவனென்றும், தர்ம சிந்தையுடையவனென்றும் நினைக்க வேண்டுமென்று தான். சிந்தனு சக்தி யற்று மனப் பேயின் ஆட்சி வயப்பட்ட ஒருவனின் எண்ணம் இதை விடச் சிறந்து விளங்குமா? தனது தாராள சிந்தையாலிவள் தன் வயப் பட்டு விடுவாளென எதிர் பார்க்கிறார்.

கோகிலமும் இதைப் பற்றி யோசித்தாள். எனினும் இவரது நண்பர்கள் கொடுத்திருக்கும் தொகைக்கு குறைவாகக் கொடுத்தால் தமது கௌரவத்திற்கு குறைவு என்றெண்ணியே செய்திருக்க வேணுமென்று நினைத்தவளாய்,

"ரொம்ப சந்தோஷம்! அவ்வளவு தான். ஒரு விஷயம் இதில் நீங்கள் என்னைப் பொருட்டாக மதிக்கப்படாது நான் வந்திருக்கும் விஷயத்தையே முக்கியமாகக் கருதவேண்டும்."

"விஷயத்தை யொட்டியும், மனுஷாளைப் பொருத்துமே எல்லாம் நடைபெறுகிறது."

"இருக்கலாம், இந்த மாதிரியான காரியங்களில் அவசியத்தை யுணர்ந்து மனப்பூர்வமாகச் செய்வதே நல்லது. அந்த மனோ பாவந் தான் மக்களிடையே பரவ வேண்டும். எங்களாஸ்ரமத்திற்கு, உங்களைப் போன்ற பிரபுக்களிடையேயும், நல்ல ஆதரவிருக்கிற தென இதன் மூலம் தெரிகிறது. அதை யடைவது தான் எங்கள் நோக்கம். உங்களுடைய உதவிக்கு ரொம்ப வந்தனம்"

"இதென்ன பிரமாதம் இதோ செக் தருகிறேன்" எனக்கூறி எழுந்து சென்று செக் ஒன்று எழுதிக் கொண்டு வந்து கொடுத்தார்.

கோகிலம் செக்கைப் பெற்றுக் கொண்டு, "நமஸ்காரம்! போய்வருகிறேன்" எனக் கூறிஎழுந்தாள்.

"அப்பா சௌக்கியமாயிருக்கிறாரா?"

"சௌக்கியமா யிருக்கிறார்."

"ஒரு நாள் அவர் இங்கே வந்திருந்தபோது உன் கல்யாண விஷயமாய் பேசிக்கொண்டிருந்தோம்....... ஏன்? அது பற்றி உன்னிடம் ஒன்றும் சொல்லவில்லையோ?"

கோகிலம் சிறிது யோசித்து "ஆம் சொன்னார்."

"சொன்னாரா! அது பற்றி நீ என்ன நினைக்கிறாய்?"

மீண்டும் கொஞ்ச நேரம் யோசித்துக் கொண்டிருந்து விட்டு, "அவ்விதம் செய்வதால் உங்கள் மனோபீஷ்டம் நிறைவேறுமென் றெண்ணுகிறீர்களா?"

"ஆம் சந்தேகமில்லாமல்."

"இது விஷயத்தில் தீர்க்கமாய் யோசித்தால் நல்லது."

"யோசிப்பதா? மாதக் கணக்காக யோசித்துத் தானிந்த முடிவிற்கு வந்தேன்."

"உங்களுடைய முடிவிலே மாற்றமே யிருக்காதா?"

"அதெப்படி இருக்க முடியும்? கோகிலம்! உலகமே தலை கிழாய்க் கவிழ்ந்தாலும் எனது முடிவு அசையாது நிற்கும்."

"உங்களுடைய விருப்பம் மனப்பூர்வமானது தானே?"

"இதைத் தவிர என் மனதிலே வேறில்லை."

"அப்படியானால் — உங்களிடம் தேவைக்கு மீறிக் கிடக்கும் பணத்தை வேறொரு நல்ல வழிக்குப் பிரையோசனப் படுத்தத் துணிவீர்களா?"

"என்ன? பண முழுவதையுமா!"

"தேவைக்கு மீறிக் கிடப்பதைத்தான் சொன்னேன். அவசிய மேற்பட்டால் முழுவதையுந்தான்."

"பணமில்லா விட்டால் வாழ்க்கையை எவ்விதம் சந்தோஷமாகக் கழிக்க முடியும்?"

"இருவர் மனமும் ஒன்று பட்டு விட்டாலே வாழ்க்கையிலின்ப மிருக்கு மென்பார்கள். அந்த இன்பத்தை யடைவதற்கு பணம் பிரதானமற்ற எளிய வாழ்க்கை போதுமே?"

"இருந்தாலும், அதிலேயே பழக்கப்பட்டுப் போன எனக்கு"

"உங்களிடம் பணமே யில்லை, அல்லது இருந்ததும் கொள்ளை போய் விட்டதென்றால், அப்போது என்ன செய்வீர்கள்?"

இதேதடா இந்தப் பெண் இவ்வளவு வாயாடியா யிருக்கிறதே என்றெண்ணியவராய், "அப்படி யிருந்தால்தான் இந்த நினைப்புக்கே இடமிருக்காதே,"

"சரி அது போகட்டும், நீங்கள் அன்பை அன்பினாலேயே யடைய விரும்புகிறீர்களா? பணத்தினாலடைய விரும்புகிறீர்களா?"

"அன்பினால் தான். பணமுங்கூட இருந்தால் சோபிதமாயிருக்குமல்லவா?"

"இருக்கும் — ஆடம்பரமாக யிருக்கும்."

"எனது கௌரவத்திற்கு அதுவும் அவசியந்தான்."

"போலிக் கௌரவத்தையே விட மன மில்லாதிருக்கும் நீங்கள், பசப்பு வார்த்தைகளினால் ஒரு பெண்ணை மயக்கி ஏமாற்றி விட நினைக்கிறீர்கள். உங்களுக்கு வாழ்க்கைப்பட நினைக்கும் பெண் — உங்களுடைய பணத்தைக் கருதியா? ஆளைக் கண்டு மயங்கியா? அல்லது யாருடைய நிர்ப்பந்தத்தினாலுமா? அதெல்லாமில்லை. அந்த மாதிரி இளம் பெண்கள் விரும்பும் ஏதாவது ஒன்று இங்கிருக்கிறதா? அதுவுமில்லை. இதற்கு முடிவு ஒன்று தான். நீங்கள் உங்களுடைய பணத்தைத் தியாகஞ் செய்வதானால்........அவள் அதற்கீடாக தனது வாழ்க்கையைத் தியாகஞ் செய்யத் தயாராயிருக்கிறாள்."

"கோகிலம்!...................பணத்திற் கீடாக தனது வாழ்க்கையைத் தியாகஞ்செய்யும் ஒரு பெண்ணுடன் கூடி வாழும் வாழ்க்கை இன்பமா யிருக்குமா?"

"ஏனிருக்காது? ஒருவரை யொருவர் பார்த்துப் பேசிப் பழகி யறியாது பெற்றோர்களால் மண முடிக்கப்பெற்ற எத்தனையோ லக்ஷக்கணக்கான தம்பதிகள், குழந்தை—குட்டிகள் பெற்று சந்தோஷமாய் வாழ்ந்து கொண்டிருக்க வில்லையா? அந்த உயர்ந்த இல்லற தர்மத்தை இவளும் அனுஷ்டிப்பாளென்று உறுதி சொல்லுகிறேன்."

அவளுடைய வார்த்தைகள் அவருக்கு எரிச்சலை மூட்டியது.

"சரிதான்! இந்தப் பணத்தை யெல்லாம் யாருக்குத்தான் கொடுக்கச் சொல்லுகிறாய்?"

"வேறு யாருக்குக் கொடுப்பது—? ஏழை எளியவர்களுக்குத் தாயகமாக விளங்கும் எங்களாஸ்ரமத்திற்குத்தான்."

"உங்களாஸ்ரமத்திற்கா!...........(ஆழ்ந்த யோசனையுடன் அங்குமிங்குமுலாவினார்) "பிருந்தாவனத்திற்கா?" என்றார் வெறுப்புடன்.

"ஆம். பிருந்தாவனத்திற்குத் தான்......யோசிக்க வேண்டிய விஷயமே...........நன்றாக யோசித்து உங்கள் சௌகரியம்போல் பதில் சொல்லுங்கள். நமஸ்காரம்! போய் வருகிறேன்." எனக் கூறியவண்ணம் அவருடைய பதிலையும் எதிர்பாராமல் அந்த அறையை விட்டு வெளியே போய்விட்டாள்.

காத்தவராயரின் முகத்திலே எள்ளும் கொள்ளும் வெடித்தது. கண்கள் ரத்தத்தைக் கக்குவன போன்று சிவப்பேறி விட்டன. "நேற்றுப் பிறந்த குட்டிக்கி என்ன அகம்பாவம்? இவ்வளவு வருஷங்களாக கஷ்டப்பட்டு சம்பாதித்த பணத்தை யெல்லாம் கொடுத்துவிட வேண்டுமாம் இவனைக் கல்யாணஞ் செய்து கொள்வதற்கு! என்ன வாய்த்துடுக்கு? அந்தக் கழுதை நடத்தும் பிருந்தாவனத்திற்கா என் பணம் பூரா வையும் கொடுப்பது?..........ஒருக்காலு மில்லை....... .......யோசிக்கவாம்..........என்னைச் சர்வமுட்டாளாக வல்லவோ நினைத்து விட்டாள். சரி இருக்கட்டும். அவள் இன்னும் எவ்வளவு தூரம் போகிறாளென்று பார்க்கிறேன்." என்ற சகஸ்திரநாமத்திற்கிடையே கோகிலத்தின் எழில் உருவம் தோன்றி அவரது கோபாக்கினியின் வெப்பத்தைச் சிறிது தணித்தது. அந்த மானஸீகப் பேரெழிலை யிவர் அள்ளிப் பருகிக் கொண்டிருந்த போது ராயப்பன் அங்கு வந்தான். அவனைக் கண்டதும் காரண மில்லாது ஒருவித எரிச்சலேற்பட்டது இவருக்கு. அது ஏனோ?

"முட்டாள் அறிவில்லாதவன்"

"எல்லா மிருக்குங்க!"

"மண்டையிலே களிமண்தானிருக்கும்."

"எல்லோருக்குமப்படித் தானுங்களா?"

"சட் வாயை மூடடா."

"வாயை மூடிட்டா வந்த விஷயத்தை எப்படிச் சொல்றதுங்க?"

"என்னடா அப்படிப் பிரமாதமான விஷயம்?"

"பிரமாதமோ – என்னவோ? இதைக் கொஞ்சம் பாருங்க" எனக்கூறி ஒரு கடிதத்தை அவர் கையில் கொடுத்தான்.

கடிதத்தைப் பார்த்த காத்தவராயர் சற்று பரபரப்புடன் "ராயப்பா! திங்கட்கிழமை எப்போடா?"

"என்னங்க இப்படிக் கேட்கிறீங்களே? திங்கட்கிழமை திங்கட்கிழமை தானுங்க."

"அட முண்டமே...............இன்னும் எத்தனே நாளிருக்கு திங்கட்கிழமைக்கு?"

"அப்படிக் கேட்டீங்களா! இன்னேக்கி என்ன கிழமையுங்க?"

"யாரை.......என்னேயா கேட்கிருய்?"

"இல்லீங்க ஞாபகம் வந்திடுச்சு. இன்னிக்கி சனிக்கிழமை (விரலே மடக்கிக் கொண்டே) ஞாயிறு— திங்கள் நாளே னின்றுங்க."

"அப்பா! சொல்லீட்டியா? கெட்டிக்காரன்தான். சரி திங்கட்கிழமை ராத்திரிக்கி பிரபுக்களுக்கெல்லாம் இங்கே விருந்து. இதோ அழைப்புக் கடிதங்கள் எழுதி வைத்திருக்கிறேன். உனக்குத்தான் தெரியுமே எல்லோரையும், கொண்டுபோய் கொடுத்து விட்டு வந்து விருந்துக்கு வேண்டிய ஏற்பாடுகளேச் செய் தெரிகிறதா?" எனக்கூறி மேஜைமீது கிடந்த கடிதக் கட்டொன்றை எடுத்து அவன் கையில் கொடுத்தார். அதை வாங்கிக் கொண்டு வெளியே வந்த ராயப்பன்

"அப்பா எப்போ பார்த்தாலும் விருந்து விருந்துண்ணு பிராணனை வாங்கிறார். இத்தனை வருஷத்துக்கப்புறம் வந்திருக்கிற தம்பியோடே கொஞ்சம் பேசிக்கொண்டிருக்கலாமுண்ணு ஒழியுதா?" என்று முணு முணுத்துக்கொண்டே போனான்.

# அத்தியாயம் 6



## இந்தமனம் — ஓர் சிந்தனை யந்திரம்

பிருந்தாவனத் தலைவிக்கும் — காத்தவராயருக்கும் ஒரு காலத்தில் ஏதோ ஒரு வகையில் நெருங்கிய சம்மந்த மிருந்திருக்கிற தென்பதை யறிந்தோம். அவர்களுடைய பெயர் "கமலாதேவி" யல்ல வென்றும், உண்மைப் பெயர் "அமிர்தாம்பாள் — அல்லது பாக்கியம்" என்பதையும் தெரிந்தோம். அவர்களுடைய சம்பாஷணையி லிருந்து அவர்களைப் பற்றிப் பலவிதமான அபிப்பிராயம் கொள்ளுவதற்கு இடமிருக்கிற தெனினும், பல ஆயிரக்கணக்கான மக்களின் புகழ்ச்சிக்கும், மதிப்பிற்கும், உரியவர்களா யிருக்கும் அவர்களுக்கு நாமும் நன்மதிப்பையே கொடுத்துப் பார்ப்போம்.

காத்தவராயரைப் பற்றி தலைவி நன்குயறிந்திருக்கிறார்கள். அந்தக் காமுகனால் கோகிலத்திற்கு ஒரு கெடுதியும் நேரிடாதிருக்க வேண்டுமே எனக் கவலை கொண்டார்கள். ஆழ்ந்த யோசனை — எதைப் பற்றி? வாழ்க்கையில் கடந்து போன நாட்களைப் பற்றியதாயுமிருக்கலாம். எவ்வளவு நேரம் இந்த நிலையிலிருந்தோமென்பதை அவர்களறியவில்லை.

கோகிலம் அதிக சிரமமில்லாமல் ஒரே இடத்தில் ரூபாய் மூவாயிரம் கிடைத்த சந்தோஷத்தாலும், காத்தவராயரின் கல்யாணப் பைத்தியத்தையும், எண்ணி எண்ணி சிரித்துக் கொண்டே எல்லா விபரத்தையும் தலைவியிடம் சொல்ல வேண்டுமென்ற ஆவலுடன்

"அம்மா!" வெனச் சப்தம் போட்டுக் கொண்டே தலைவியின் அறைக்குள் நுழைந்தாள்.

தலைவி தலை நிமிர்ந்து. "வா அம்மா! இப்படி யுட்கார். இன்றைக்கு வசூல் எப்படி? யார் யாரைப் பார்த்தாய்?" எனக்கேட்டார்கள்.

"இன்றைக்கு ஒரே யொருவரைத் தான் பார்த்தேன். அவரே பாக்கி யிருந்த ரூபாய் மூவாயிரத்தையும் கொடுத்து விட்டார்" என மகிழ்ச்சியுடன் கூறினாள்.

தலைவி வியப்புடன் "யாரம்மா அந்தக் கர்ணன்?"

"அவர் தான் —— காத்தவராயரம்மா"

தலைவி திடுக்குற்று "யார் காத்தவராயரா!" எனப் பதட்டத்துடன் கேட்டார்கள்.

தலைவியின் முக மாறுபாட்டைக் கவனித்த கோகிலம் "ஏனம்மா அப்படிக் கேட்கிறீர்கள்" என்றாள்.

"ஒன்று மில்லை........அவர் மகா கல்நெஞ்சராச்சே, அவரெப்படி மனமுவந்து இவ்வளவு அதிகத் தொகையைக் கொடுத்தார் என்று தான் ஆச்சரிய மடைந்தேன்"

"அவரென்னம்மா அப்படிப் பட்டவரா?"

"அவர் கல்நெஞ்சர் மட்டுமல்ல – அவரைப் போல் கொடியவரை — கேடு கெட்ட மனிதரை, இந்த உலகமெங்கும் சுற்றினாலும் பார்க்க முடியாது"

"அவரைப் பற்றி யிப்படி யெல்லாம் சொல்லுகிறீர்களே; நானவரைக் கல்யாணஞ் செய்து கொள்வதாகவல்லவோ எண்ணி யிருக்கிறேன்"

"யாரை! காத்தவராயரையா!! நீயா கல்யாணஞ் செய்து கொள்ளப் போகிறாய்!!! கோகிலம் என்ன விளையாட்டிது?"

"இல்லையம்மா. உண்மை தான் அப்படியொரு நாடகம் நடக்கிறது"

"என்ன கோகிலம்! கல்யாண மென்றாய்; இப் போது நாடக மென்கிறாய் இதெல்லா மென்ன?"

"எல்லா முண்மை தான். இதோ இந்த துண்டு கடிதத்தில் என்ன எழுதி யிருக்கிற தெனப்பாருங்கள்" எனக்கூறி ஒரு கடிதத்தைக் கொடுத்தாள்.

தலைவி அக்கடிதத்தைப் படித்து முடித்து "இதன் அர்த்த மென்ன கோகிலம்?"

"அது தான் எனக்கும் விளங்க வில்லையம்மா!"

"இந்த கடிதம் எப்பொழுது? எப்படி கிடைத்தது"?

"நான் காத்தவராயரின் பங்களாவுக்குள் நுழைந் ததும் ஒருவன் கொண்டு வந்து இந்தக் கடிதத்தைக் கொடுத்தான்"

இருவருக்கும் அர்த்தம் விளங்காமல் அந்தக் கடி தத்தில் அப்படி யென்ன எழுதியிருந்தது!

"உன்னைச் சூழ்ந்திருக்கும் அபாயத்தை யறியாது காத்தவராயரிடம் செல்லுகிறாய் — போ — பயப்படாமல் போ — அவர் கல்யாண விஷயமாய் உன்னிடம் ஏதே னும்கேட்டால், ஒப்புக்கொள்ளும் பாவனையாக பதில்ச் சொல் — சட்டென்று ஒப்புக்கொண்டால் சந்தேக மேற் படலாம். முடிவு குழப்பமாக இருக்கவேண்டும்."

— தினகரன்.

என்றிருந்த கடிதத்தை மீண்டுமொருமுறை தலைவி படித்தார்கள்.

"கோகிலம்! அவர் கல்யாண விஷயமாய் உன்னிடம் கேட்பார் என்பது இவனுக்கு எப்படித் தெரிந்தது? அவர் உன்னிடம் கேட்டாரா?"

"ஆம் கேட்டார். ஆனால் அது இவருக்கு எப்படித் தெரிந்ததோ"

"உம்..........அதற்கென்ன முடிவு சொன்னாய்?"

கோகிலம் அங்கு நடந்தவை முழுதும் சொல்லி, "அம்மா! மாப்பிள்ளை நிச்சயமாகி விட்டது. கல்யாணத் திற்கு நாள் பார்க்க வேண்டியது தான்" என்றாள் சிரித்துக்கொண்டே.

"கோகிலம்! உனக்கென்னமோ எல்லாம் விளையாட்டா யிருக்கிறது. இதன் விளைவு மிகப் பயங்கரமாகவே யிருக்குமென்று நினைக்கிறேன்."

"நீங்கள் அவசியமில்லாது கவலை யடைகிறீர்கள். தக்க காரணமில்லாமல் அவர் இக்கடிதத்தை எழுதியிருப்பாரா? இதன் முடிவைக் கேட்பதற்கு அவர் இங்கே வந்தாலும் வரலாம்; அவர் வந்தால் விபரந்தெரியும்" என்றாள் கோகிலம்.

தலைவி பதில் சொல்லவில்லை. முகம் கவலை தோய்ந்து விளங்கியது. இதன் சூழ்நிகழ்ச்சி என்னவென்பது அவர்களுக்குத் தெரியும். அவர்கள் மனதிலே நடந்து கொண்டிருந்த போராட்டத்தைப் பற்றி கோகிலத்திற் கென்ன தெரியும்?

"காத்தவராயரைக் கல்யாணஞ் செய்து கொள்ளு வதாக ஒப்புக்கொள்ளும்படி தினகரன் ஏன் இவளுக்கு எழுதவேண்டும்? அவன் காத்தவராயரின் மீது கண் வைத்து அப்பகுதியில் சுற்றிக் கொண்டிருக்கிறனு? அப்படியானல், அரசாங்கத்திற் கெதிராக சூழ்ச்சி செய்யும் கூட்டத்தில் காத்தவராயரும் ஒருவரா? சே! இது என்ன எண்ணம்? யார் எப்படிப் போனல் எனக்கென்ன? ஜீவியத்தையே பொது நலனுக்குத் தியாகஞ் செய்த எனக்கு, இது பற்றி என்ன கவலை?" என்று எண்ணியவாறு தனது மனதை வேறு வழியில் திருப்பும் நோக்கத்தில் எழுந்து தொழிற்சாலைப் பகுதிக்குச் சென்றுர்கள்.

பிருந்தாவனத்தின் வளர்ச்சி பற்றியே சதா யோசித்துக் கொண்டிருக்கும் கோகிலத்தின் மனதிலே, வேறு பல விஷயங்களும் புகுந்து கொண்டன. எனினும், எதையும் ஆழ்ந்து யோசிக்கும் தன்மையுடைய வளல்லவா அவள்? சிந்தனைக்கு ஏற்றது தனிமை. தனிமையை நாடிச் சென்றுள். பிருந்தாவனத்தை ஊடுருவிச் செல்லும் நீரோடையின் கரையிலே அமர்ந்தாள். சலசல வென்றோடிக் கொண்டிருக்கும் தெளிய நீர் அவளது கால்களைத் தழுவிச் சென்று கொண்டிருந்தது. அன்று நடந்தவைகள் அவள் கண் முன்னே தோன்றியது. காத்தவராயரை மணமகனுக்கி தன்னை மணப் பெண்ணுக்கி தன் மனமாகிய மணையிலமர்த்திப் பார்த்தாள். மணப்பெண்ணின் மனத்துடிப்பை யுணர்ந்தாள். அப் பெண்ணினுடைய ஜீவன் நீராயுருகி கண்

வழியே பெருகியோடுவதைக் கண்டாள். இவள் மனமும் பொருமியது. இவளது கண்களிலும் நீர் பெருகியது. ஹா! என்ன கொடூரம்!! இதைப் போன்ற பொருத்த மற்ற மண வினைக்குட்பட்ட பெண்மணிகள் நாட்டிலே எத்தனை..........இது போன்ற மணங்கள் நடைபெருது தடுக்க ஒரு சட்டம் அவசியமென உணர்ந்தாள். அப்படியொரு சட்டம் வருவதற்கு தன்னாலான சகல முயற்சியும் செய்ய வேண்டுமென்ற தீவிர எண்ணமுங் கொண்டாள்.

அப்போது எங்கிருந்தோ ஒரு ப்ரம்மானந்தமான கீதம், காற்றிலே கலந்து வந்தது. என்ன இனிமை! கீதம் ஆஸ்ரமத்தின் பக்கத்திலிருந்து எழுவதைக் கண்டு, ஆஸ்ரமத்தில் யாராவது பாடிக்கொண்டிருப்பார்களென நினைத்து, மனதை மீண்டும் சிந்தனை உலகிற்குத் திருப்பினுள். எனினும் மனம் திரும்பவில்லை. அது அந்தக் கீதத்தை அநுபவித்தது. அதன் பொருளிலே லயித்து விட்டது. “இந்த மனம் ஓர் சிந்தனை யந்திரம்” என்பது அதன் முதல் வரி. வர வர அக்கீதம் வெகு சமீபத்தில் கேட்டது. ஆம்! உண்மை. இந்த மனம் ஓர் சிந்தனை யந்திரமே. எங்கேயாவது சிந்தனையற்ற ஓர் மனமிருக்க முடியுமா? அப்படி யிருந்தால் அதை என்னவென்று சொல்லுவது? மனத்திற்கு ஓர் நல்ல சிறப்பு — இவளும் மனதை சிந்தனை யந்திரமாக்கி அதை இயங்க விட்டபோது, அந்தக் கீதம் நின்று விட்டது. சட்டெனத் திரும்பி கீதம் எழுந்து வந்த திக்கை நோக்கினுள். தனக்கு 10 அடி தூரத்தில்

தினகரன் நின்று கொண்டிருப்பதைக் கண்டாள். இவள் தன்னைத் திரும்பிப் பார்த்ததும் தினகரனும் மெல்ல நடந்து இவள் சமீபம் வந்து "எங்கே சிந்தனு உலகத்திலேயா?" என்றான் நகைத்துக் கொண்டே.

"சிந்தனு உலகிலல்ல இந்தப் பூவுலகிலிருந்து சிந்தனை என்னும் யந்திரத்திலேறி, கற்பனு உலகத்திலுலாவிக் கொண்டிருந்தேன்."

"ஓ! அப்படியா!! இப்போது அந்த யந்திரம் வழியிலே நின்று விட்டது போலும்."

"அது ஆனந்தமாய்ப் போய்க் கொண்டிருந்தபோது, சங்கீதம் என்ற பெரும் புயல் தோன்றி மேலே செல்ல விடாமல் தடுக்கவே, கீழே இறங்க வேண்டிய நிர்ப்பந்த மேற்பட்டது."

"சரிதான் கற்பனு உலகில் கண்ட தென்னவோ?"

"சொல்லட்டுமா?"

"தாராளமாய்."

"காதலிக்கு — அவளை விரும்பும் ஓர் கிழவனைக் கல்யாணஞ் செய்து கொள்வதாக ஒப்புக்கொள்ளும்படி கட்டளையிடுகிறார் காதலர். அவளும் அதற்கிணங்க அந்தக் கிழவன் முன்னிலையில் ஒப்புக் கொண்டு விடுகிறாள் ஒரு நிபந்தனையின் பேரில்."

"நிபந்தனை என்ன?"

"அந்தக் கிழவன் அவளைக் கல்யாணஞ் செய்து கொள்ள விரும்பினால், அவனுடைய பணம், சொத்து பத்து எல்லாவற்றையும் அவள் விரும்பும் ஓர்

ஸ்தாபனத்திற்கு எழுதிக்கொடுத்து விடவேண்டும். இதுதான் அந்த நிபந்தனை.”

“இந்த நிபந்தனைக்கு அந்தக் கிழவன் ஒப்புக் கொண்டானு?”

“அவனு? அவன் ஓர் வலுத்த கிழவன். பெண் மோகமும், பணத்தாசையும் கொண்டவன். இரண்டையு மிழப்பதற்கு மனமில்லாமல் தத்தளிக்கிருன்.”

“அப்புறம்..........அதன் முடிவு...........?

“அவன் யோசித்து முடிவு சொல்வதற்கு அவ காசம் கொடுத்து அவள் வந்து விட்டாள்.”

“அவன் இப் பெண்ணினுடைய இஷ்டத்தை ஏற் றுக்கொண்டால்...........?”

“இதற்கு பதில் அவள் காதலரைத்தான் கேட்க வேண்டும். அவர் எதற்காக அந்தக் கிழவனைக் கல்யா ணஞ் செய்து கொள்ளுவதாக ஒப்புக் கொள்ளச் சொன்னுர்?”

“அவளுக்கு ஏற்பட விருந்த அபாயத்தை தவிர்ப் பதற்காகத்தான்.”

“அப்படியென்ன அவளுக்கு நேரிடவிருந்தது?”

“அந்த கிழவன் ஓர் மூர்க்கனென்றும், அவன் அவளை மணக்க விரும்பியதும், ஏற்கனவே அவளுக் குத் தெரிந்திருந்தும் அவள் அந்தக் கிழவன் வீட்டிற்கு தனிமையில் வருகிருள். அவளைக்கண்டதும் அத்துன் மார்க்கனுடைய எண்ணத்தில் மாறுபாடு தோன்றி ஞல், அவளுக்கு நிச்சயம் அபாய மேற்படுமென்று தான்.”

"அவ்வளவு நிச்சயமாய்த் தெரியும்போது அவளை அங்கு போகாமலேயே தடுத்திருக்கலாமல்லவா?"

"தடுத்திருக்க முடியும்..........ஆனல், அவள் தன் நலனைக் கருதி யங்கு செல்லவில்லை. பொது நலனுக்கே அவனுடைய உதவியை நாடிச் சென்ருள். அவன் தன்னிடம் கோரி வந்த காரியத்திற்கு அவள் எதிர் பாராத பெரிய உதவியைச் செய்வதன் மூலம், அவள் தன்னிடம் பிரியங் கொள்ளும்படி செய்ய வேண்டு மென்று நினைப்பான் அந்தக் கிழவன். இது அவனு டைய மனேபாவம். அவள் அவனைக் கல்யாணஞ் செய்து கொள்ளுவதாக ஒப்புக் கொள்ளுவதன் மூலம் இரு பெரிய நன்மை யுண்டு. ஒன்று அவள் எதிர் பார்த்த உதவி நிச்சயமாகக் கிடைத்து விடும், இரண் டாவது ஏதேனும் அபாயம் ஏற்படுவதா யிருந்தாலும் தவிர்க்கப் பட்டுவிடும்"

"சரி ஒருக்கால் அவளுடைய நிபந்தனைக்கு அவன் இணங்கி வந்தால் இவள் என்ன செய்வது?"

"முதலிலே அவனுடைய சொத்து முழுவதையும் ஆஸ்ரமத்தின் பெயருக்கு நன்கொடையாக எழுதி வாங்கிவிட வேண்டும்"

"பிறகு?"

"கல்யாணத்திற்கு ஓர் நாளைக் குறிப்பிட வேண் டும்"

"குறிப்பிட்ட நாளும் வந்து விட்ட தென்ருல்?"

"கையில் கங்கணம் கட்ட வேண்டியது தான்" எனக்கூறிச் சிரித்தான்.

கமாஷாகவே சொன்னுனிதை. ஆனால், கோகி லமோ தன் காதலனுடைய கட்டளை எனவே கொண் டாள். அவள் இதர பெண்களைப் போல் சபல எண் ணங் கொண்டவளா? அவளுடைய மனோதிடமும் — ஸ்திரநோக்கமும் — தியாக சிந்தையும் — சலியாத உழைப்புமே அவளை இவ்வளவு பிரபல்ய மாக்கியது.

தன் காதலனுடைய விருப்பம் — அவனுடைய கட் டளை — ஆஸ்ரமத்தின் நலன் — இவைகளுக்காகத் தன் வாழ்க்கையைத் தியாகஞ் செய்ய நிச்சயித்தாள்.

ஆஸ்ரமவாசியாக வளர்ந்தாள் — அதன் நலனுக் காகவே உழைத்து வந்தாள் — இன்றும் அதன் வாழ்விற்கே தனது வாழ்க்கையைத் தியாகஞ் செய்ய முற்பட்டாள்.

என்ன அவளுடைய தியாக உணர்ச்சி!
தனது வாழ்க்கையின் ஜீவன் எனக்கருதிய தன் காத லனே அவனுக்கு ஏற்பட்டிருந்த காதலைத் தியாகஞ் செய்யும் போது, தனது வாழ்க்கை என்ன அவ்வளவு மேலானதா? ஆஸ்ரமத்தின் வளர்ச்சிக்கு உறுதுணை யான செல்வம் ஒரு மலைபோன்றும், தனது வாழ்க்கை ஓர் கிலம் போன்றும் அவள் கண முன்னே தோன்றி யது. தன் ஒருவளின் வாழ்க்கையைத் துறப்பதால் பல்லாயிரக் கணக்கான தொழிலாளர்களின் ஜீவனத் திற்கு வழி ஏற்படுகிறதென்ற எண்ணம் அவளுடைய உறுதிக்கு பலத்த அணையைப் போட்டது.

"தன் தலைவரின் கட்டளை அதுவானால், அதை நிறைவேற்றச் சித்தமாயிருக்கிறுள்" என்ருள் திடமாக.

தன்னுடைய வார்த்தைகள் அவளை வருந்தச் செய்து விட்டதென்பதை யறிந்தான். எனினும், அவனின் விஷமத்தனம் போகவில்லை.

"ஆம்! ஒரு போர் வீரனின் மனப்பான்மை போன்று" என்றான் இரக்கமற்ற தினகரன்.

"உண்மை. அதனில் ஒரு சிறிதும் குறைவுபட மாட்டாளிவள்"

"ரொம்ப சந்தோஷம்! இப்படியோர் வீரமும் — தியாக உணர்ச்சியும், நிறைந்த பெண்ணைக் காதலியாக அடைந்த அவள் காதலனின் பாக்கியமே பாக்கியம்!"

"இதை விடப்பெருமை யவளுக்கு என்ன வேண்டும்? தலைவனுடைய புகழ்ச்சிக்கு ஏற்ற பெண் அவள்" என்றாள் கம்பீரமாக. டாங் — டாங் — என்ற மணியோசை ஆஸ்ரமத்தின் தியான மண்டபத்தினின்று எழுந்து வந்தது. இதை சுப சகுன மென்பார்களே!

இருவரும் எழுந்து தியான மண்டபத்தை நோக்கி சென்றனர் மௌனமாக.

# அத்தியாயம் 7

## மத்திய சங்கத்தின் மந்திராலோசனை

அன்று திங்கட்கிழமை. காத்தவராயரின் மாளிகையில் விருந்துக்கான ஏற்பாடுகளெல்லாம் தடபுடலாய் நடந்து கொண்டிருக்கிறது. வீரப்பன் விருந்து மண்டபத்தில் தேள்வையான யிடங்களில் மின்சார விளக்குகள் போட்டுக் கொண்டிருந்தான்.

எல்லா வேலைகளும் சரி வர நடக்கிறதாவெனச் சரி பார்த்துக் கொண்டே விருந்து மண்டபத்துக்கு வந்த ராயப்பன், வீரப்பனிடம் "தம்பி இன்னும் முடியலியா?" எனக் கேட்டான்.

"எல்லாம் முடிச்சுட்டேண்ணு. இங்கே தான் கொஞ்சம் பாக்கி" எனப்பதிலளித்தான் வீரப்பன்.

"சீக்கிரம் முடிச்சுடு விருந்துக்கு நேரமாச்சு" என்று அவனைத் துரிதப் படுத்திவிட்டு வேறு பகுதிக்குச் சென்ருன்.

அவன் சென்றதும், வீரப்பன் சில நூதன மின்சாரக் கருவிகளை அந்த மண்டபத்திலிணைத்தான். வேலை முடிந்தது; மண்டபத்தின் எல்லா விளக்குகளையும் ஏற்றி வெளிச்சம் போதுமா வென்பதைப் பார்த்துக் கொண்டிருந்தான். அச்சமயம் அங்கு வந்த காத்தவராயர், ஜெகஜ்ஜோதியாய் விளங்கிக் கொண்டிருக்கும் விருந்து மண்டபத்தைப் பார்த்ததும், அப்படியே மலைத்து நின்று விட்டார். அவரது கண்கள் கூடக் கூசின. அவ்வளவு பிரகாசம். சுற்றிலும் ஒரு முறை பார்த்தார் அதனழகை. அங்கே ஒரு மூலையில் வேலை

செய்து கொண்டிருந்த வீரப்பனைக் கூப்பிட்டு, "வீரப்பா! ஏது இதெல்லாம் உன்னுடைய வேலை தானோ?" எனக்கேட்டார் சந்தோஷம் பொங்க.

"ஆமாங்க எஜமானுடைய கட்டளை யின்னு அண்ணு சொன்னுங்க."

"பேஷ்! ரொம்பக் கெட்டிக்காரஞ யிருக்கிருயே? வேலைக்காரனிப் படித்தானிருக்க வேண்டும்."

"இப்படி யில்லேன்ஞ எஜமான்களிடத்திலே பேரெடுக்க முடியுங்களா?"

"சபாஷ்! உன்னைப் போன்றவனே எங்களிடம் வேலை பார்க்கத் தகுந்தவன். சரி வேலை எல்லாம் முடிந்ததா?"

"ஆம் எஜமான்"

"எங்கே ராயப்பன்?"

"அந்தப் பக்கம் போனுங்க"

"கூப்பிடு அவனை"

வீரப்பன் ஓடிச் சென்று ராயப்பனை அழைத்து வந்தான்.

காத்தவராயர் "ராயப்பா! பார்த்தாயா இதன் அழகை?" என்ருர் பெருமிதத்துடன்.

"ரொம்ப நல்லா யிருக்கு! அப்படியான ஆளு நம்மகிட்டே யிருக்கிற போது குறைச்சலா எப்படி யிருக்குங்க?"

"அப்படிச் சொல்லு. இன்றைக்கு வரும் பிரபுக்கள் மத்தியிலே நமது கௌரவம் உயர்ந்து விடுமல்லவா?"

"சந்தேக மென்ன? என்றைக்காவது குறைஞ் சிருந்தால் தானே இன்றைக்கி உயரப் போகுது."

"உண்மையைச் சொன்னுய். என்றைக்கும் அவர் களுக்கு ஒரு படி உயர்ந்தே நிற்போம். சரி விருந்தினர் கள் வரும் சமயமாகி விட்டது. நான் போய் அவர்களை வரவேற்கிறேன்" என்று சொல்லிய வண்ணம் வெளியே போனுர்.

மணி 8-30. விருந்தினர்கள் ஒருவர் பின்ஒருவ ராய் வந்து கொண்டிருந்தனர் வித விதமான அலங்கா ரங்களுடன். எல்லோரும் வந்து விட்டார்களா வென்ப தைச் சரிபார்த்துக் கொண்டு அவர்களை எல்லாம் விருந்து மண்டபத்திற்கு அழைத்து வந்தார்.

விருந்தினர்களான பிரபுக்களெல்லாம் அந்த மண் டபத்தின் அலங்காரத்தை பார்த்து வியந்தனர்.

"என்ன காத்தவராயரே! எது ரொம்ப பிரமாத எற்பாடாயிருக்கே? எனக்கேட்டார் ஒருவர். இந்தக் குளோப்பர் எங்கே வாங்கினீர்களென்றுர் மற்றொருவர். ஸீனரியோ எங்கிருந்து தருவித்தீர்களென்றுர் மூன்று மவர். எலட்ரிக் பிட்டிங்க்ஸ் எந்தக் கம்பெனியார் செய்தது என்றுர் நான்காமவர்." இப்படியாக ஒவ்வொ ருவரும் ஒவ்வொரு கேள்வியைக் கேட்டுக் கொண்டே போனுர்கள்.

காத்தவராயருக்கு தலை கால் தெரியவில்லை. இத் தனை பிரபுக்களும் ப்ரமிக்கும் வண்ணம் அந்த மண்டபத் தை யலங்கரித்த வீரப்பனை ஒரு கணம் நினைத்தார். எனி னும், இவ்வளவையும் தன் வேலைக்காரர்களில் ஒருவன்

தான் செய்தானென்று சொல்வது கௌரவக் குறை வென்று நினைத்தோ என்னவோ?

"பிரபுக்களாகிய உங்களைச் சந்தோஷப் படுத்த வேண்டுமென்றே, சென்ற பல நாட்களாக அதிக சிரமப்பட்டு இதைச் செய்து முடித்தேன். உங்களுடைய சந்தோஷமே எனக்குப் பரம திருப்தி" என்று பொதுவாகப் பதிலளித்தார்.

விருந்து நடந்தது — சுவை நிறைந்த பதார்த்தங்கள். அவர்களுக்கென்றே தயாரிக்கப் பட்டிருந்த பதார்த்தங்கள் — விருந்துச் சாப்பாடே பழக்கமாகக் கொண்டிருந்தவர்கள் — அவர்கள் விருந்தைப் பற்றி யாருங் குறை சொல்லவில்லை.

விருந்து முடிந்தது. அதற்கான சாமான்களெல்லாம் அப்புறப் படுத்தப்பட்டன.

காத்தவராயர் ராயப்பனை அழைத்து — "ராயப்பா! எல்லோரையும் வீட்டுக்கனுப்பி விட்டாயல்லவா?"

"ஆமாங்க. நானும் என் தம்பியுந்தா னிருக்கிறங்க"

"சரி கதவுகளை எல்லாம் தாளிட்டு விட்டு இரண்டு பேரும்போய் முன் வாசலில் காவலிருங்கள். யார் வந்தாலும் — என்ன அவசரமானாலும் உள்ளே விடப் படாது. ஜாக்ரதையாயிரு" எனக்கூறி யவனை யனுப்பி விட்டு விருந்து மண்டபத்திற்கு திரும்பி வந்து, அங்குள்ள மின்சார புத்தானென்றை அமுக்கினார். மண்டபத்திலுள்ள கதவுகள் — ஜன்னல்கள் எல்லாம் தானாகச் சாத்திக் கொண்டன. பின் காத்தவராயர் தன்னாசனத்திலமர்ந்ததும், வந்திருந்த பிரபுக்களிலொருவர் எழுந்து

"காத்தவராயரே! இங்கு நடைபெறும் விஷயங்கள் ரகஸ்யமானவை என்பது உங்களுக்குத் தெரியுமல்லவா?" எனக்கேட்க, காத்தவராயர் "தெரியும் இங்கு நடப்பவைகளைப் பார்க்கவோ, கேட்கவோ முடியாத விதமாய் இந்த மண்டபம் அமைக்கப் பட்டிருக்கிற தென்பது நண்பர்களில் அநேகருக்குத் தெரியுமே! ஒரு சிறிதும் பயமில்லாது நடவடிக்கைகளில் கலந்து கொள்ளலாம்" எனப் பதிலளித்துவிட்டு மேலும்,

"கனவான்களே! எனது பிரிய சகோதரர்களே!!

இன்றைய இந்தக் கூட்டம் நமது சங்க கூட்டங்களிலே மிகமிக முக்கியத்துவம் வாய்ந்த தாகும். நாம் வாழ்வதா — அன்றி சாவதா? என்பதை நிர்ணயிக்கும் கூட்ட மிது. இந்த மண்டபத்திற்குள் வந்ததும் இதன் அலங்காரத்தைப் பார்த்து நீங்களெல்லாம் சந்தோஷமடைந்தீர்கள். நாம் — நமது பணத்தைச் செலவிட்டு — நமது சௌகரியத்திற்காக — மனத் திருப்திக்காக — நமது வீடுகளிலே செய்து கொள்ளும் இது போன்றவைகளைக் கூட தடை செய்யும் அரசாங்க உத்தரவு வருமோவென எதிர்பார்க்கும் துர்ப்பாக்கிய நிலையிலே நாமின்றிருக்கிறோம். (கேளுங்கள்)

நாமென்ன அரசாங்கத்தின் பணத்தைக் கொள்ளையடித்தோமா? அல்லது பொது ஜனங்களின் பணத்தைத் தான் பறித்துக் கொண்டோமா? அன்றி எங்காவது புதையல் கிடைத்து எடுத்து வைத்துக் கொண்டிருக்கிறோமா? (மௌனம்)

நம்மாலும், நமது முன்னோர்களாலும் தேடிய சொத்து. இன்றல்ல — நேற்றல்ல பாரம்பர்யமாய் அவைகளின் பேரில் நமக்குள்ள உரிமையை வழித் தோன்றலாகிய நாம் இன்று அநுபவித்துக் கொண்டிருக்கிறோம். இதை யாரும் மறுக்க முடியாது.

அரசாங்கத்தை நடத்துவதற்குப் பணமில்லை யென்றால், அதற்கு நாம் தானா அகப்பட்டோம்? கடைத் தேங்காயை எடுத்து வழிப்பிள்ளையாருக்கு உடைக்கும் ஞாயத்தைப் போன்றிருக்கிற தல்லவா இது? எதற்கெடுத்தாலும் வரி வரி யென்று போட்டு நமது பணத்தைப் பிடுங்கி ஏழை எளியவர்களின் நிலையை உயர்த்துகிறார்களாம். பாமா மக்களிடம் வரியென்று போனால் கஞ்சிக் கில்லாத அந்த ஏழைகள் புரட்சி செய்யக் கிளம்பி விடுவார்களென்பது தெரிந்தே நமது ரத்தத்தை உறிஞ்ச ஆரம்பித்திருக்கிறார்கள். ரத்தத்தை உறிஞ்சி வரும் அந்த மூட்டைப் பூச்சியின் நமு நமுப்பு தாங்கக் கூடியதாயில்லை. நாம் உயிர் பிழைக்க வேண்டுமானால் அதை நசுக்கியே தீரவேண்டும். (கரகோஷம்)

நமது குறைகளைத் தீர்ப்பதற்கு மகஜர்கள் எழுதுவதினாலும் — தூது கோஷ்டி யனுப்புவதினாலும் — அரசாங்க சபைக்குப் போய் தொண்டை கிழியக் கத்துவதினாலும் — பிரயோசனம் இல்லை யென்பதைக் கண்டோம். நேரிடையாக எதிர்ப்பதற்கும் போதிய பலமற்றவர்களா யிருக்கிறோம். எனவே, மறைமுகமாக எதிர்த்து வெற்றி பெறுவதே சிறந்தது. அது தான் ராஜ தந்திரமுங் கூட.

நமக்கு என்றும் வழிகாட்டியா யிருந்து வருகிற நமது மாபெருந்தலைவர் இதற்கும் ஒரு வழிகாட்டி யிருக்கிறார்கள். அவர்கள் நமக்கு அனுப்பி யிருக்கும் சுற்றறிக்கையை வாசிக்கின்றேன்." எனக்கூறி ஒரு கடிதத்தை எடுத்து பிரித்து வாசித்தார்:

"நாம் இறுதியாக அரசாங்கத்திற்கு அனுப்பிய மகஜருக்கு இதுவரை எதுவும் பதில் கிடைக்காத படியால், உடனடியாக நமது சங்கத்தின் நான்காவது விதியை அமுலுக்குக் கொண்டுவர நேரிட்டது. மத்திய சங்கத்தினர்களாகிய நீங்கள், பூர்ண பொறுப்புடன் காரியத்தை நிறைவேற்று வீர்களென நம்புகிறோம்.

தலைவர்

பிரபுக்கள் ஐக்ய சங்கம்.

என்றிருந்த சுற்றறிக்கையை வாசித்து முடித்து தன் சகாக்களை நோக்கி,

கனவான்களே!

நமது சங்கத்தின் நான்காவது விதி என்ன வென்பது உங்கள் எல்லோருக்கும் தெரியும். அது தான் நமது தலைவிதியை நிர்ணயிப்பதாகும். எவ்விதமாயினும், நமது தலைவரின் கட்டளையை சிரமேற்கொள்வோம். மேற்கொள்ளும் காரியத்தில் வெற்றியும் பெறுவோம். நமது பரம்பரையான உரிமையை நிலைநாட்டுவோம்" என்றார் ஆவேசத்துடன்.

அப்போதெழுந்த கரகோஷம் ஒருவாறு அடங்கியதும்,

"பிரிய நண்பர்களே!

சுற்றறிக்கையுடன் வந்த குறிப்பொன்றிருக்கிறது அதையும் வாசிக்கிறேன்" எனக்கூறி ஒரு துண்டுக் கடிதத்தை எடுத்துப் படித்தார்:

"பதினைந்தாந் தேதி மாலை 4 மணிக்கு தலைவரும், முதல் மந்திரியும் 'செங்காட்டு மாளிகைக்'குச் செல்லுகின்றார்கள். அவர்களின் கார் 'பேய்க் காட்டு ஆலமர'த் திருப்பத்தில் திரும்பும் போது, த வ று து காரியத்தை முடிக்க வேண்டும்" என்றிருந்த குறிப்பையும் வாசித்து முடித்து, "நண்பர்களே! இதுவரை வெறும் பேச்சளவிலே — பக்கம் பக்கமாக மகஜர்கள் எழுதியனுப்புமளவிலே நின்று கொண்டிருந்தோம். இப்பொழுது நமது திறமையைச் செய்கையில் காட்ட வேண்டிய தருணம் வந்து விட்டது. இந்த ஓர் பெரிய காரியத்தை முடிக்கும் நமது சகோதர அங்கத்தினரின் நிலை, நமது சங்கத்திலே உயர்ந்து விடும். நமது எல்லோருடைய கௌரவத்தையும், உரிமையையும் என்? வாழ்வையே நிலைநிறுத்தும் நண்பர் ஒருவர் முன் வர வேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன்." என்றார் காத்தவராயர்

சபையில் ஒரே நிசப்தம். அங்குள்ளவர்களில் வயதான ஒருவர் எழுந்து,

"காத்தவராயரே! சபையின் நிசப்தத்தால் எல்லோரும் கோழைகளென்று அர்த்தமில்லை. சீட்டுக் குலுக்கி எடுப்பது தான் முறை" என்றார்

அவர் சொல்லியதுதான் ஞாயம் என்ற தீர்மானமே அச்சபையி லெழுந்தது. ஒருவரை யொருவர் பார்த்துத்

துத் தலையாட்டிக் கொண்டனர். காத்தவராயரும் அதை ஆமோதித்தவராய், அங்கு வந்திருந்தவர்கள் பெயரை தனித் தனியே துண்டு கடிதங்களில் எழுதி, சுருட்டி ஒரு பெட்டியில் போட்டு முன் பேசிய அந்த வயதாளி யான பிரபுவின் முன் கொண்டு போய் வைத்து அதி லுள்ள சுருள்களில் ஒன்றை எடுக்கும்படி கேட்டுக் கொண்டார். அந்தக் கிழவரும் அதற்கிணங்கி பெட்டி யை நன்றாகக் குலுக்கி விட்டு அதிலுள்ள சுருள்களில் ஒன்றை எடுத்து பிரித்து "காத்தவராயன்" என்று அதில் எழுதியிருந்த பெயரை உரத்தி வாசித்தார்.

சபையில் ஒரே கரகோஷம்!

அங்கு வந்திருந்தவர்களை குஷிப்படுத்தி அவர்களுடைய வீர-தீர-தியாக உணர்ச்சிகளைப் பற்றி அபாரமாய்ப் புகழ் ந்து பேசுவதன் மூலம் இந்தப் பொறுப்பை அவர்களில் ஒருவரின் தலையில் சுமத்தி விடலாமென எதிர்பார்த்தார் காத்தவராயர். ஆனல், அது இவர் தலையிலேயே விழுந்தது.

தான் மேற்கொள்ளும் காரியத்தில் வெற்றி பெற் ருல், அரசாங்க உளவாளிகளின் கண்களுக்கு இலக் காக வேண்டும். வெற்றி பெருவிட்டாலோ? என்ன பயங்கரம்! சங்கத்தின் நான்காவது விதியை — தமது தலைவிதியை ஏற்கத் தயாராயிருக்க வேண்டும். இந்தத் தொல்லைகளிடையே, கோகிலத்தின் மோகன உருவம் வேறே வந்து காக்ஷியளித்தது. பாவம்! அவர் எதிர் பார்த்த காரியங்களெல்லாம் மாருகவே நடந்து கொண்டிருக்கிறது.

இவ்வளவு பேருக்கு மத்தியில் தான் யோசித்துக் கொண்டிருப்பதால், தைரிய மற்றவனென்று நினைத்து விடுவார்களே என்ற எண்ணமும் வந்தது. ஒருவாறு நிலைமையை சமாளித்துக் கொண்டு தன் சகாக்களை நோக்கி,

"கௌரவம் பொருந்திய அங்கத்தினர்களே! அதிஷ்ட வசமாக எனக்குக் கிடைத்த இந்த அறிய தொண்டை பூர்ண திருப்தியோடு ஏற்று அதை வெற்றிகரமாய் முடித்து, உங்கள் எல்லோருடைய நன்மதிப்பிற்கும் பாத்திரமாவேன். இத்துடன் சபை கலைகிறது வந்தனம்" என்றார். இவ்வளவு கோர்வையாக இந்த வார்த்தைகளை சொல்லுவதற்கு பிரம்மப் பிரயத்தனமாகி விட்டது.

சபையோர் அதை மனப்பூர்வமான தெனக்கருதினரா? என்னமோ ஒருவருக் கொருவர் ரகஸ்யமாகப் பேசிக் கொண்டே கலைந்து சென்றனர்.

தனிமையிலிருந்தார் காத்தவராயர் — மனமோ சொல்லொணாத குழப்ப மடைந்தது – அவரிடம் சற்று முன் காணப்பட்ட சுறு சுறுப்பும் கம்பீரமும் எங்கு சென்று விட்டனவோ? அவருக்கொரு கஷ்டம் வரும் போது அவரது மனமும் அவரை வஞ்சித்து விடுகின்றது. என்ன செய்வார் பாவம்! 90 வயது சென்ற தள்ளாத கிழவனின் நிலையை யடைந்து விட்டார். சோர்ந்த நடையுடன் தனது அறைக்குச் சென்று "பொத்"தென சோபாவில் விழுந்தார்.



# அத்தியாயம் 8



## முக்கோலையும் — லக்ஷியமும்

நாட்கள் பல கழிந்தன. கடன் காரனொருவன் தான் கொடுப்பதாகச் சொன்ன தவணை நாள் வந்து விட்டால் என்ன நினைக்கிறான்? "இந்த இழவு நாள் இன்னும் 10 நாள் தள்ளி வரப்படாதா" என்று நினைப்பது சகஜம். அது போன்று "உரிமை — கடமை" என்றெல்லாம் அலங்காரப் பேச்சுப் பேசிய காத்தவராயர் தமது சங்கத்திற்கு செய்ய வேண்டிய கடமையை, அதற்கு தான் கொடுக்க வேண்டிய கடன் என எண்ணினர். கடன்காரனின் மனம் போன்று இந்தப் பதினைந்தாந்தேதி இன்னும் பதினைந்து நாட்கள் தள்ளி வரப்படாதா? வென இவர் மனமும் தவித்தது. கோகிலத்தைப் போன்று ஓர் வனிதாமணியிடம் மனதைப் பறிகொடுத்த அவர் மனம் தவிக்காது என்ன செய்யும்?

அன்று காலையிலிருந்தே அவர் மனம் எதிலும் செல்லவில்லை. இன்ன தென்றறிய முடியாத ஓர் நிலை. கோபம் — வெறுப்பு — பயம் — ஆசை — எல்லாம் ஒன்று சேர்ந்து அவரை வதைக்க ஆரம்பித்தன. பிற்பகல் மணி இரண்டு. கொலைக் கருவிகளை எடுத்து மடியில் மறைத்து வைத்துக் கொண்டார். அப்போது ஏதோ அவசரமாக இவரிடம் வந்த ராயப்பன் முகவாயில் கையை வைத்து ஆழ்ந்த யோசனையிலிருக்கும் காத்தவராயரைப் பார்த்து உடம்பிற்கு ஏதேனும் அசௌகரியமோ வென நினைத்து மெதுவாக "எஜமான்" என்றான்.

இந்த சப்தம் அவர் காதிலே விழுந்ததும் ஏறிட்டு அவனை யொரு பார்வை பார்த்தார். அதிலே தோன்றிய கோபத்தைக் கண்டதும் உடம்பிற்கல்ல மனதிற்குத் தான் அசௌகரியமெனத் தீர்மானித்தவனுய், "அந்த அம்மா வந்திருக்கிருங்க" என்ருன் சாவதானமாக.

"யாருடா அந்த அம்மாள்? இந்த வேளையிலே...."

"அவுங்க தானுங்க பிருந்தாவனத்தம்மாள்"

"யார்! கோகிலமா!!"

பாருங்கள் அவரது ஆவலை! இந்த நிலையிலேயும் ஒரு நிமிஷம் ப்ருமானந்தத்தை யனுபவிக்கிருர்!

"நீங்க சின்னம்மாளையில்ல சொல்லுறீங்க அவங்கயில்லை. பெரியம்மா தானுங்க வந்தி..........."

"சட்.......பெரியம்மாள்.......அந்தப் பீடைக்கு இங்கென்ன வேலை?"

"போய் கேட்டுக்கிட்டு வந்திடுரேன்னுங்க" எனக்கூறி வெளியே செல்லத் திரும்பினுன்.

"டே! நீ போய் எஜமான் தூங்குகிருர் என்று சொல்" என்ருர்.

"உத்தரவு" என்று சொல்லிக் கொண்டே வெளியே சென்றவன் மீண்டும் வந்து, "எஜமான்! அப்படி சொன்னேன். ஏதோ ரொம்ப முக்கியமான காரியமாம். எழுப்பச் சொன்னுங்க" என்ருன்.

"என்னடா அப்படி தலைபோகிற காரியம்....... முக்கியமாம்..........."

"அவங்களைக் கேட்டால்ல தெரியும்........நான் போய் வேணு முன்னுத் தெரிஞ்சுக் கிட்டு வர்ரேன்"

"வேண்டாம்........அவளை இங்கே யனுப்பு" என்ருர்.

ராயப்பன் வெளியே போன மறு நிமிஷத்தில் தலைவி அந்த அறைக்குள் வந்தார்கள்.

ராயப்பன் தலைவியைக் காத்தவராயரின் அறைக்கு அனுப்பி விட்டு உள்ளே சென்ருன். அங்கே வீரப்பன் தனது அறையில் தன்னெதிரே ஒரு பெட்டியை வைத்துப் பார்த்துக் கொண்டிருப்பதைக் கண்டு, "வீரப்பா! எப்போப் பார்த்தாலும் இதுதானு வேலை....மனுஷன் சாப்பிட்டவுடனே கொஞ்ச நேரம் தூங்குவான்னு பேரு" என்று சலிப்புடன் கூறிக் கொண்டே அவ்வறைக்குள் நுழைந்தான்.

"அண்ணு! இதுவரைக்கு இந்த மாதிரி பெட்டியைப் பார்த்தே யிருக்கமாட்டாய். இந்த வீட்டுக்குள்ளே எந்த மூலையிலே என்ன நடந்தாலும், இங்கே யிருந்தே எல்லாத்தையும் இந்த பெட்டியில் இருக்கிற கண்ணுடியிலே பார்க்கலாம்" என்ருன்.

"நிசம்மாவா!"

"நிசந்தான். நீ வேணும்னுப்பாரேன். நம்ம எஜமானுடைய அறையிலே நடக்கிறது இந்தக் கண்ணுடியிலே தெரியும். அவங்க பேசிறது கூடக் கேட்கும்" என்ருன்.

ராயப்பன் ஆச்சரியத்துடன் அந்தக் கண்ணுடியைப் பார்த்தான்.

கண்ணாடியிலே தெரிவது 'எஜமானுடைய அறை. அவர் ஒரு சோபாவில் உட்கார்ந்திருக்கிறார். பிருந்தாவனத்தம்மாள் நின்று கொண்டிருக்கிறார்கள். ராயப்பன் ஆச்சரியம் தாங்காதவனாய் ஏதோ கேட்க வாயெடுத்த போது, அவர்கள் பேசுவது கேட்டது.' வீரப்பன் பேசாமல் அதைக் கவனிக்கும்படி சைகை காட்டினான்.

தலைவி பேசினார்கள் முதலில்,

"ஆம்....உங்களுக்கு என்னைப் பார்பதற்குக் கூட வெறுபாகத் தானிருக்கும்"

"இந்த மாதிரி நேரங்கெட்ட நேரத்தில் வந்து பிராணனை எடுத்தால்..........."

"உங்கள் பிராணனை எடுக்கும் விஷயம் வேறு இருக்கிறது. நான் அதற்கு வரவில்லை.

"நீ வந்த விஷயந்தானென்ன சொல்லித் தொலையேன்"

"சொல்லிவிட்டுத் தொலையிரேன்....அதற்குத் தானே நான் வந்தது. அரசாங்கம் உங்கள் மீது சந்தேகப்படுகிறது"

"என் மீதா? நான் அவ்விதம் ஒன்றும் குற்றஞ் செய்யவில்லையே"

"குற்றஞ் செய்திருக்கிறீர்களோ என்னவோ? நீங்கள் பழைய குற்றவாளி யில்லையா?"

"அது தான் உனக்கும் எனக்கும் தெரியுமே"

"நன்றாகத் தெரியும். அவர்கள் உங்கள் மீது சந்தேகப்படுவது—பழைய குற்றவாளி என்பதற்காகவோ,

அன்று அரசாங்கத்திற் கெதிராக நடைபெறும் சதிக் கூட்டத்தில் நீங்களும் ஒருவராக யிருக்கலாம் என்ற உத்தேசத்திலோ தெரியவில்லை. இதிலிருந்து நீங்கள் தப்ப வேண்டுமானல் அதற்கு வழி ஒன்றே யொன்று தான்."

"கமலா! நீ எனக்கா வழி சொல்ல வந்தாய்? இத்தனை வருஷமாய் இந்த ஊரிலேயே இருந்து வருகிற என்னைக் கண்டு பிடிக்க வில்லையாம்; இனி மேல் தான் கண்டு பிடிக்கப் போகிருர்களோ? பைத்தியம்! இதற்கு வருகிருள் இந்த வெயிலிலே."

ஆம்!........பைத்தியம்........அன்று முழுப் பைத்தியமாகவே யிருந்தேன். இல்லா விட்டால், தண்டனை பெற்று சிறைச்சாலை மூலையில் ஒரு கட்டிக் கூழுக்கும் காவலாளிகளிடம் கெஞ்சிக் கூத்தாடிக் கொண்டிருந்த உம்மையும், உமது நண்பரையும், சிறையிலிருந்து தப்பி வர உதவி செய்திருப்பேனு? உம்மீது ஏற்பட்டிருந்த அன்பினுலேயே செய்தேன். இல்லை........உம்மீது ஏற்பட்டிருந்த பைத்தியம் என்று தான் சொல்ல வேண்டுமதை. இதனுல் எனக்கு வரவிருந்த பெருத்த அபாயத்தையும் பொருட் படுத்தாது உம்மையும், உமது நலனை விரும்பியுமே செய்தேன். சந்தோஷத்திலும் — துக்கத்திலும், உயர்விலும் — வீழ்ச்சியிலும், நிழல் போல் உம்மை விட்டகலாதிருந்தேன். ஏன்? உம்மை நல்ல வழிக்குக் கொண்டு வந்து விடலாமென்ற பைத்தியக்கார எண்ணத்தினுல் தான். அரசாங்கத்திற்குப் பயந்து தலைமறைவாக ஊர் ஊராய்ச் சுற்றிக் கொண்டிருந்த ஒவ்வோரிடத்திலும் உமது அராஜகத்தின் கை என்னை அறைந்து

கொண்டே வந்தது. அதோடா?.......உமது குடிவெறியின் கூத்திற்குப் பாத்திரங்களானோம் நானும் எனது புதல்வனும். ஈவிரக்க மற்ற உமது மனதிலே புத்திர வாஞ்சைக்கு இடமேது? (கண்களில் நீர் பெருக) பெத்த மனம் – வளர்த்த உள்ளம் பதற பதற அடித்து விரட்டினீரவனை. அன்றே உமக்கென்று என்னுள்ளத்திலே இருந்து வந்த இடம் பொதுஜன சேவைக்குத் தானம் செய்யப்பட்டு விட்டது. எந்த அரசாங்கச் சிறையிலிருந்து உம்மை விடுவித்த குற்றத்திற்கு நான் ஆளாகியிருக்கிறேனோ; அதே அரசாங்க மக்களுக்கு என்னாலான தொண்டைச் செய்ய வேண்டுமென்ற நோக்கத்திலேயே இங்கு வந்தேன். இன்று அவ்வழியில் ஏதோ செய்து கொண்டிருக்கிறேன். எனது நோக்கம் ஒரு ஸ்தாபனமாக வளர்ந்து விட்டது. இனி அரசாங்கத்தால் கண்டு பிடிக்கப்பட்டாலும், சந்தோஷமாகத் தண்டனையை ஏற்றுக் கொள்ளுவேன்.

அன்று எங்கோ தூரதேசம் போவதாகச் சொல்லிவிட்டுச் சென்றீர். என்னைத் தொடர்ந்தே இங்கும் வந்துவிட்டீர். உமக்கு தலைவர் ஜெயசிங்கரிடமுள்ள வஞ்சத்தைத் தீர்த்துக் கொள்ளவே இங்கு வந்திருக்கிறீர். இல்லை என்று சொல்ல உமக்குத் தைரிய மிருக்கிறதா? விளக்கின் சுடரை யணுகிய விட்டில் எங்காவது தப்பியதுண்டா? பாபமே உருவாய்த் தோன்றி, அதுவே உடலாய் வளர்ந்து, அதுவே எண்ணமும் செய்கையுமாய், இன்று அதுவே உமது அழிவிற்கும் காரணமா யிருக்க வேண்டுமா?

உமது பெயரையும் உருவத்தையும் மாற்றிக்கொண்டீரே; உமது குரலை மாற்ற முடிந்ததா? உம்மை யாரும் தெரிந்து கொள்ள முடியாதென்று நினைத்தீரே; நான் உம்மைத் தெரிந்து கொள்ள வில்லையா? பெயரையும் உருவத்தையும் மாற்றிக் கொண்டது போல உமது குணத்தையும் மாற்றிக் கொள்ளலாகாதா? விட்டு விடும். இன்று டன் துஷ்க்ருத்யங்களை எல்லாம் ஒழித்து விடும். தலைவரின் பெருந்தன்மை உம்மை ரக்ஷிக்கும் — மனித வர்க்கத்தின் மன்னிப்பு உமக்குக் கிடைக்கும். வாழ்க்கையின் இறுதியிலாவது கடமையை உணரும்" என்று ஆவேசத்துடன் கூறி நிறுத்தினார்கள்.

வீரப்பன் கண்ணாடியை உற்றுப் பார்த்த வண்ணமிருந்தான், அவனது கண்களில் நீர் பெருகியோடியது.

ராயப்பனுக்கு ஒன்றும் விளங்கவில்லை. தன் எஜமானரைப் பற்றி தலைவி சொன்னவைகளில் சில விஷயங்களே அவனுக்கு விளங்கியது. அதன் பூரா விபரங்களையும் கேட்டுத் தெரிந்து கொள்ள ஆவல் கொண்டு தன் தம்பியை நோக்கினான். அவன் கண்களில் நீர் வடிவதைப் பார்த்ததும், மனம் பதறியவனாய் "தம்பி! என்னப்பா உடம்புக்கு அழுதுகிட்டிருக்கியே" எனக் கேட்டு நெற்றியைத் தொட்டுப் பார்த்தான்.

"அண்ணா! எனக்கு உடம்பிற்கு ஒன்றுமில்லை. அந்த அம்மா கண்ணீர் விட்டழுததைப் பார்த்ததும் எனக்கும் கண்ணீர் வந்து விட்டது" என்று சமாதானம் சொன்னான்.

அப்பொழுது காத்தவராயர் பேசுவது கேட்டது. இருவரும் அதைக் கவனித்தனர்.

காத்தவராயர், "கமலா! பிரசங்கம் ரெம்ப நீண்டு விட்டது. போதும்! நீ எவ்விதம் உனது கடமையைச் செய்வதற்கு வந்ததாகச் சொல்லுகிருயோ, அதே போன்று நானும் எனது கடமையைச் செய்வதற்கே வந்தேன்."

"கடமை!...........கொலையும், கொள்ளையும், கடமையாகுமா?"

"கமலா! கொலை – கொள்ளை ஆம்! சிறையில் கிடந்த நாங்கள் எதற்காக வெளியில் வர ஆசைப்பட்டோம்? இந்த சுகபோக வாழ்க்கையை மட்டும் விரும்பியா? இல்லை. அரசாங்கத்தைக் கைப்பற்றும் முயற்சியிலேயே அன்று சிறை சென்றோம். அதிலிருந்து வெளி வந்ததின் நோக்கமுமதுதான். இன்றும் அதே முயற்சியில் தானிருக்கிறோம். அதுதான் எங்கள் லக்ஷியம் இதோ பார் என் முகத்தை நான் உயிரையும் கேவலம் இந்த வாழ்வையுமட்டும் விரும்பி யிருப்பேனே யானல், என் முகம் இந்தக் கோலமாகி யிருக்காது. நான் இங்கு வந்ததின் நோக்கம் ஜெயஸிங்கரிடமுள்ள வஞ்சத்தைத் தீர்த்துக் கொள்ளுவதற்கென்று சொன்னுய். உண்மை! இந்தக் கோர ரூபம் அவனைக் கொலை செய்தே தீரும். அதுமட்டு மல்ல, இந்த அரசாங்கத்தையும் இது விரும்பிய பெண்ணையும் கைப்பற்றுவது திண்ணம்."

"தலைவரைக் கொல்வதும் – அரசாங்கத்தைக் கைப்பற்றுவதும் – கோகிலத்தை யடைவதும் – வெறுங் கன

வாகவே முடியும். லக்ஷக்கணக்கான மக்களுக்குப்பேருப காரியாக இருக்கும் தலைவரைக் கொல்லுவதால் உமக்கு என்ன லாபம்? அவர்களைக் கொன்று விடலாம்; எனினும் ஜனங்களின் அரசாங்கத்தை உம்மால் கைப்பற்ற முடியுமா? கோகிலம்! அவளைப் பற்றி நீர் மனத்தால் நினைப்பதும் தகுதியல்லவே? வேண்டாம், இந்த மாதிரியான எண்ணங்கள் ஒருவனுடைய அழிவிற்குத் தான் தோன்றும். நீர் அழிவதை விட தலைவரிடம் சென்று உமது குற்றத்தை ஒப்புக் கொள்ளுவதே நல்லது. ஒருக்கால் அவர் உம்மை மன்னிக்கலாம். மனிதன் எப்பொழுதுமே கெட்டவனல்ல. ஆசையும், கோபமுமே அவனைக் கெடுக்கிறது. அவ்விரண்டையும் அடக்கும் சக்தியையொருவன் பெற்று விடுவானே யானல், மனிதருள் மேன்மை யடைவான். அதே போன்று நீர் ஆசையையும் கோபத்தையும் ஒழித்து – அதே நிலையில் தலைவரின் மன்னிப்பும் கிடைத்து விட்டால், உம்மிடமிருக்கும் ஏராளமான தனத்தைக் கொண்டு நாட்டுக்குப் பெரிய தொண்டைச் செய்யலாம். மக்கள் குலம் உம்மை வரவேற்கும். உமது ஜென்மத்திலேயே கண்டறியாத இன்பத்தைக் காண்பீர்! அவரின் மன்னிப்புக்கிடைக்கவில்லையெனில், சிறையின் தொழிற்சாலையில் ஓர் தொழிலாளியாகி விடும். இதையன்றி நீர் உயிர் வாழ்வதற்கு வேறு வழியே யில்லை. சினத்தை யடக்கி சாந்தத்தைக் கொண்டேன் — ஆசையை யொழித்து வாழ்வையும் வெறுத்தேன், நாட்டன்பு பற்றியது – நாட்டுக் குழைத்தேன். எனினும், மனவமைதி யற்றேன். எவ்வளவோ

முயன்றும் மனம் சாந்தியுறவில்லை. "நீ இந்நாட்டின் குற்றவாளி" என்று மனமென்னைத் தினமும் வதைக்கிறது. என்னால் சகிக்க முடியவில்லை. என் மனப்பாரம் இறங்கினால் தான் நான் உயிர் வாழமுடியும். இதோ தலைவரின் இல்லத்திற்கே செல்லுகிறேன் எனது குற்றத்தை ஒப்புக்கொள்ள. விதிப்படியாகட்டும்.

அநீதியும் — பொய்மையுமான ஒரு உருவத்தைச் சுற்றி, நீதியும் உண்மையுமான ஓர் ஜோதி தோன்றி வட்ட மிட்டிருக்கிறது. அந்த ஜோதியிலே விழுந்து சாகட்டும் அவ்வுருவம்" எனக்கூறித் திரும்பி அறையின் கதவை நோக்கி இரண்டடி எடுத்து வைத்தார்கள்.

காத்தவராயரின் கண்கள் சிவப்பேறி முகம் பயங்கரமடைந்து விட்டது. எழுந்து தலைவியை நெருங்கிக் கொண்டே "தர்மம்! உன்னை தலைவரிடம் போகவிட்டு எனக்கு இங்கென்ன வேலை? இதோ உனக்கு மனச் சாந்தி" என்று சொல்லிக் கொண்டே இடுப்பிலிருந்த கத்தியை எடுத்து தலைவியின் தேகத்தில் பாய்ச்சினான்.

இந்த நிகழ்ச்சியை பார்த்துக் கொண்டிருந்த வீரப்பன் ப்ரம்மித்து ஒரு பித்தன் போலானான். ராயப்பனோ துள்ளிக் குதித்தான். கோபம் பொங்கி யெழுந்தது. "டே! கொலை விழுந்து போச்சு உக்காந்துக் கிட்டிருக்கியே, எழுந்திருச்சு வாடா அவனை ஒருகை பாத்திடுவோம். எஜமானும் எஜமான் கொலைகாரன்" என்றிரைந்து கொண்டே வீரப்பனின் காதைப் பற்றி இழுத்தான்.

"அண்ணு! இரு. கொஞ்சம் பொரு. அவசரப் பட்டால் நமக்கும் ஆபத்துவரும். அதோ அந்த அம்மா என்னமோ சொல்லப் போருங்க பாரு" எனக்கூறி அவன் கையைப் பலமாகப் பிடித்துக் கொண்டான். அப்போது அங்கே தலைவி. "ஆம்! எதிர்பார்த்தது தான் ஓம் சாந்தி!!" என்ருர்கள் ஈன சுவரத்தில். தலையொரு புறம் சாய, கீழே விழுந்தார்கள்.

அவர்கள் கீழே விழுந்ததும் அவ்வெறியன் பரபரப் படைந்து, அவ்வறையின் தரையிலே விரிக்கப்பட்டிருந்த ரத்னக் கம்பளத்தை எடுத்தான். அறையின் மத்தியில் ஒரு சுரங்கக் கதவிருந்தது. அதைத் திறந்து தலைவியை இழுத்து சுரங்கத்தில் தள்ளி முன்போல ஒழுங்கு படுத்தி விட்டு, வெளியே வந்து அறையின் கதவைப் பூட்டிக்கொண்டு சென்ருன் வெறி கண்ட கொலைஞன்.

  

பல பெரிய மரங்களடர்ந்த நீண்ட மலைத் தொடரினூடே வளைந்து வளைந்து செல்லும் பாதையில் நான்கு மைல் தூரம் சென்ருல், பாதையின் ஓரத்தில் ஒருபெரிய ஆலவிருக்ஷம் வானமளாவி நிற்பதைக் காணலாம் அதைத் தான் ஜனங்கள் "பேய்க் காட்டு ஆலமரம்" என்று சொல்லுவார்கள். பிரயாணத்திற்கு அபாயம் நிறைந்த இடம். ஒரு புறம் பெரிய பள்ளத்தாக்கு. மறு புறம் பெரிய ஆலவிருக்ஷம். அதை யொட்டி பாதையில் "ட" போன்ற திருப்பம். கார் ஓட்டிகள் முழு வேகத்தையும் குறைத்துத் தான் அதில் திரும்ப வேண்டும். கொஞ்சம் அஜாக்ரதையாகயிருந்தாலும் அபாயம் ஏற்

பட்டுவிடும். அந்த இடத்தில் இதுவரை பல கார் விபத்துக்கள் ஏற்பட்டிருக்கின்றன. அநேக உயிர்களும் பலியாகியிருக்கின்றன. இவ்வளவும் அந்தக் காட்டிலே வாசஞ்செய்யும் பேய்க் கூட்டத்தின் செய்கையென்று மக்கள் ஒரு காலத்தில் நினைத்திருந்தனர் அதனுல் தான் அந்த ஆலமரத்திற்கு பேய்க் காட்டு ஆலமரமென்ற பெயரு மேற்பட்டது. அது எப்படியோ போகட்டும். இன்று காத்தவராயறென்ற மனிதப்பேய் அதே இடத்தில் இரு உயிர்களைப் பலி கொள்ளப் போவதென்னவோ உண்மை!

அம்மரத்தின் இலேகளடர்ந்த கிளேயொன்றில் தமது உபகாரணமான ரிவால் வரைப் பிடித்து வழி நோக்கிக் கொண்டிருந்தார் காத்தவராயர். அப்போது ஒரு கார் வேகமாக வரும் சப்தங் கேட்டுத் தயாராயிருந்து கொண்டார். கார் ஆலமரத்தின் சமீபம் வந்ததும் அதன் வேகங்குறைந்தது. தலேவரும் — முதன் மந்திரி தர்மஸீலரும் தங்கள் சின்னங்களுட னிருப்பதையும் முன் ஸீட்டில் மெய்க்காவலன் ஒருவனிருப்பதையும் பார்த்தார். கார் அத்திருப்பத்தில் திரும்பும் போது, இவருடைய ரிவால் வரிலிருந்து இரு குண்டுகள் "டுமீல் — டுமீல்" என்ற சப்தத்துடன் வெளிப்பட்டன. காரிலிருந்த இருவரும் "ஹா" வென்ற சப்தத்துடன் சாய்ந்தனர், காரோட்டி பரபரப்புடன் வேகத்தை யதிகப் படுத்தினுன். கார் பஞ்சாகப் பறந்து விட்டது.

கார் தன் கண்களுக்கு மறையும் வரை. அதையே பார்த்துக் கொண்டிருந்து மறைந்ததும் மரத்தை விட்டிறங்கி காட்டில் விழுந்து நகரத்தை நோக்கி ஓடியது அம் மனிதப் பேய்!

ஓரே நாளில் மூன்று கொலேயா?



# அத்தியாயம் 9

## பூனே மேட்டில் — ஞானனந்தர்.

நகருக்குத் தெற்கே நாலு மைல் தூரத்தில் "பூனே மேடு" என்றோர் செழிப்பான இடமுண்டு. அதிலே புராதனமான ஓர் கோவிலும் குளமுமிருக்கிறது. அதை யடுத்து நெருங்கி ஓங்கி வளர்ந்திருக்கும் பல பெரிய விருக்ஷங்களினூடே அமைக்கப் பட்டிருந்த குடிசையில் பிரபல உபன்யாசகரான ஞானனந்த ஸ்வாமிகள் வசித்து வருகிறார். பல வருஷங்களுக்கு முன்னே இவர் இந்த நகரத்திற்கு வந்த போது, பெயர் ஊர் தெரியாத எத்தனையோ லக்ஷக்கணக்கான சாமியார்களில் இவரும் ஒருவராகவே யிருந்தார். சத்திரங்கள் மடங்கள் இவைகளிலேயே தங்கினர். இவரது தோற்றமும் பேச்சும் மக்களை வசியப் படுத்திற்று. இவரைப் பற்றி தெரிந்த சிலர் பலராகி இப்போது பெரும் பாலோரும் தெரிந்து கொண்டனர். பணக்காரர்கள் — பிரபுக்களிடையேயும் இவருடைய செல்வாக்குப் பரவியது. இவரைப் போன்ற மகான்கள் — யோகிகள், நகரத்தில் வசிப்பதைவிட தனிமையை நாடுவது இயற்கை யல்லவா? ஞானனந்தரும் ஒரு பிரபுவினுடைய உதவி பெற்று பூனே மேட்டில் தனது வாசஸ்தலத்தை அமைத்துக் கொண்டார்.

ஞானனந்தர் ஆறடியுயர மிருப்பார். சிவந்த மேனி. கூரிய விழிகள். தெளிந்த — உறுதியான பார்வை, எதற்கும் கலங்காத மனோதிடம். சாந்தமும் — பசுமையும் குடி கொண்ட அவரது முகத்திலே சதா புன்சிரிப்பு தவழ்ந்து கொண்டே யிருக்கும். தேர்ந்த கல்விமான்.

பல நூல்களை ஆராய்ச்சி செய்த அறிஞர். கீழ்த்தரமான எண்ணங்கள் அவரது மனதிலே தோன்றுவதில்லை. மேலான வார்த்தைகள் தான் அவர் வாயினின்று வெளி வரும். எந்த விஷயத்தையும், உயர்ந்த தத்துவங்களையுங் கூட மக்கள் எளிதில் புரிந்து கொள்ளும் வண்ணம் சாதாரண பாஷையிலே பேசுவார். மக்களை வசீகரிக்கும் இனிய பேச்சு. அவரது பிரசங்கங்களெல்லாம் ஒரு கக்ஷியின் சார்பாகவோ, ஒரு சமயத்தின் சார்பாகவோ யிருக்காது. மக்களின் பொது அறிவை வளர்ப்பதாகவே யிருக்கும். வாரத்தில் ஒரு நாள் நடைபெறும் அவரது பிரசங்கத்திற்கு சாதி – சமய – வேறு பாடின்றி எல்லா மதத்தினரும் கூடுவார்கள். பொதுக் கூட்டத்திற்கு தவறாது விஜயஞ் செய்யும்படி வேண்டிக் கொள்ளும் கூட்டமல்ல இது. மக்கள் தாங்களாகவே விரும்பி ஆவலுடன் வந்து சேரும் கூட்டம். ஆயிரக்கணக்கானவர்கள் கூடியிருந்தாலும் ஒரு சிறிதும் சப்தமிருக்காது. அத்தனை பேர்களின் மனமும் செவியும், பிரசங்கத்திலே லயித்து விடும். எனவே நகரத்திலும் சுற்று வட்டகையிலும் ஞானனந்தரின் புகழ் ஓர் ஜோதியாய் பிரகாசித்தது.

சாம்பசிவம்! கோகிலத்தின் தந்தை. அவனுக்கு வாழ்க்கையில் ஒருவித வெறுப்பு – நகரவாசத்தில் ஒரு வித கசப்பு. இந்தத் தொல்லைகளை எல்லாம் ஒழித்து நிம்மதியாக தமது ஜீவியத்தை போக்க. வேண்டுமென்று விரும்பினன். ஞானனந்தரின் ஞாபகம் வந்தது. நாம் முன் குறிப்பிட்டபடி கோகிலத்திற்கு ஓர் கடிதமெழுதி யனுப்பி விட்டு "பூனே மேடு" வந்து சேர்ந்தான். ஞான

னந்தரிடம் அவனுக்கு அபாரப் பிரேமை. அவருடைய பிரசங்கத்தன்று அவருக்கு பக்கத்திலிவன் தானிருப்பான். அவ்வளவு பைத்தியம். ஆம்! இவ்வளவு நாளும் அளவுகோல், கத்திரி. துணிக்குவியல், பணம் இவைகளை பற்றியே தெரிந்துகொண்டிருந்தான். இப்போது உலக இயல்பற்றிக் கேட்கும் போது ஏதோ புதிய விஷயங்களாகப்படுகிறது. ஆச்சரியமு மடைவான். அவைகளில் தமக்கு ஏற்படும் சந்தேகங்களை ஞானனந்தரிடம்கேட்டு தெளிந்து கொள்வான். ஒன்றுக் கொன்று சம்மந்த மில்லாத பல கேள்விகளைச் சதா கேட்டுக் கொண்டே யிருப்பான். ஒவ்வொன்றுக்கும் சரியான பதில் ஞானனந்தரிடமிருந்து பெறுவான். இருவரும் பொது விஷயங்களைப் பற்றி அடிக்கடி பேசுவதுண்டு. அவ்விதம் ஓர் நாள் பேசிக் கொண்டிருந்த போது, ஞானனந்தர், "சாம்பசிவம்! நான் யாரிடமும் அவர்கள் சொந்த விஷயத்தைப் பற்றி கேட்பது வழக்க மில்லை. உன்னிடத்திலே யுள்ள தனிப் பிரியத்தினுல் தான் உன் குடும்ப விஷயத்தை யறிய விரும்புகிறேன்" என்ருர்.

"சுவாமிகளுடைய விருப்பம்! எனக்கு மனைவி யில்லை. அவளிறந்து பல வருஷங்களாகி விட்டன. புதல்வி யொருவள். வயது 18 ஆகிறது. பிருந்தாவனத்திலே வேலை பார்த்து வருகிருள். பல வருஷங்களாக நான் இந்த நகரத்திலே புடவை வியாபாரஞ்செய்து வந்தேன். இந்த ஊர்தான் எனது பூர்வீகம். எனது வியாபாரத்திலே அதிக நஷ்ட மேற்பட்டு விட்டது; அதைச் சரிப் படுத்து வதற்கு காத்தவாராயர் என்பவரிடம் ரூபாய்

மூவாயிரம் கடன் வாங்கினேன். அப்படி வாங்கியும் வியாபாரம் சுகப்படவில்லை. மேலும் மேலும் நஷ்டந்தான் ஏற்பட்டது. அதினால் வியாபாரத்தை நிறுத்திவிட்டேன். இப்போது ஒரு வருஷமாகிறது வியாபாரத்தை நிறுத்தி. மேலும் ஏதாவது வேறு வியாபாரத்தைப் பார்க்கலாமென்றாலும் புடவையைத் தவிர வேறு வியாபாரத்தில் எனக்கு பரிச்சியமுமில்லை. அதற்கு வேண்டிய பணமுமில்லை. கடன் வாங்கிச் செய்வதற்குப் பிரியமுமில்லை. வீட்டோடிருந்து விட்டேன். சமீபத்தில் ஓர் நாள் காத்தவராயர் என்னைக் கூப்பிட்டனுப்பி, எனது கோகிலத்தை தமக்கு கல்யாணஞ் செய்து தரும்படி கேட்டார். காத்தவராயரைப் பற்றி சுவாமிகளுக்குத் தெரியுமோ என்னவோ? அவரிடம் பணமிருக்கிற தென்பதைத் தவிர வேறு வழியில் அவரை மனிதனாக நினைப்பதற்கேயில்லை. நான் கண்டிப்பாக மறுத்து விட்டேன். அவருக்கு என் மீது கோபம்; அவரிடம் நான் கடன் பட்டிருந்தேன். அவர் என்னைப் பல வழியிலும் தொந்தரவு செய்ய முடியும். அவருடைய தொல்லைகளுக்காளாகாமலிருக்க எண்ணி எனது வீட்டை அவருடைய கடனுக்காக கிரயஞ் செய்து கொடுத்து விட்டேன். எனது வீடும் போய் விட்டது; மேலும் வியாபாரத்தி லிறங்க மனமுமில்லை, நிம்மதியாய் ஒரு இடத்திலிருந்து காலங் கழிக்க எண்ணினேன். சுவாமிகளைப் பற்றி நினைப்பு வந்தது. இங்கே வந்தேன். எனது அறிவும் விசாலமடைந்து வருகிறது.'' எனக்கூறி நிறுத்தினான்.

ஞானனந்தர் நீண்ட பெருமூச்சு விட்டு "கணக்கற்ற திரவியத்தைசேர்த்தான். தன் வாழ்நாளின் பெரும் பகுதியை சிற்றின்ப சுகத்திலே கழித்தான். பேரின்பமாகிய மனத்தூய்மையை எய்தும் இந்த வயதிலேயும் பெண் பித்து அவனை விட்டபாடில்லை. மனிதனது எண்ணம் நீண்டு கொண்டே யிருக்கும். அவனது ஆசைக்கு முடிவே யில்லை. மெய்யற்ற இந்த உலக வாழ்வென்னும் ஜோதியில் – இவனது மனமென்னும் விட்டில் பூச்சி போய் விழட்டும். விழுந்து சாகட்டும்."

ஒரு சித்தரின் சாபம்போன்று வந்தது இந்த வார்த்தைகள். என்றுங் காணாத ஒளியை அவரது விழிகளிலே கண்டான் சாம்பசிவம்.

விழிகளின் தீக்ஷண்யம் சிறிது சிறிதாக மாறி சாந்த நிலையை யடைந்தது.

"சாம்பசிவம்! தாயற்ற பெண், பாவம்! உனது பிரிவால் வருந்துவாளே?"

"புகழ்ச்சிக்கல்ல சுவாமி! அவள் அறிவுள்ள பெண். எனது நோக்கத்தை கடித மூலமாக தெரிவித்து விட்டே வந்தேன். வருத்த மிருக்கலாம் எனினும் இதே கவலையா யிருக்கமாட்டாள்"

"அது வரையில் நீ அதிஷ்டசாலிதான் – அறிவுள்ள ஓர் பெண்ணுக்குத் தகப்பனல்லவா? பெண்கள் தங்கள் அறிவை சிறிது விருத்தி செய்து கொண்டார்களானல் – அவர்களால் நாட்டிற்கும் பெரும் பயனுண்டு. பிருந்தாவனத்தை நடத்துவது ஒரு பெண்மணி

யல்லவா? அதன் சிறப்பைப் பற்றி நான் கேள்விப் பட்டிருக்கிறேன். ஒரு முறை சென்று பார்க்க வேண்டும்."

"அடடா! இதுவரை நீங்கள் பார்த்ததில்லையா? கமலாதேவியார் என்பவர்கள் அதை நடத்துகிறார்கள். இப்போது 500 தொழிலாளர்கள் அங்கு வேலை செய்கின்றனர். ரொம்ப நல்ல முறையில் நடைபெறுகிறது."

"அப்படித் தான் கேள்விப் பட்டேன். ஒரு முறை யங்கு போய் வருவோம்......உம்........நேரமாகி விட்டது. மேடைக்குப் போவோம் வா" வெனக் கூறியவனேயும் அழைத்துக்கொண்டு ஒரு பெரிய ஆலமரத்தின் கீழ் அமைக்கப் பட்டிருந்த பிரசங்கமேடைக்கு வந்தார். அன்று பதினைந்தாந் தேதி – திங்கட்கிழமை – பிரசங்க நாள். ஞானனந்தர் மேடைக்கு வந்ததும் எல்லோரும் எழுந்து வணங்கியமர்ந்தனர். ஞானனந்தரும் பிரதி வணக்கம் செய்து கொண்டே தமது பிரசங்கத்தை ஆரப்பித்தார்.

'சகோதரிகளே! சகோதரர்களே!!

இன்று அரசியலைப் பற்றி உங்களுக்குச் சொல்ல விரும்புகிறேன். அரசர்—ஆட்சி என்பனவற்றைப் பற்றிப் பேசும் போது நமக்கு அரசராக யிருந்து,இப்போது குடியரசின் தலைவராக யிருக்கும் தலைவர் ஜெயஸிங்கரை உவமையாக எடுத்துக் கொண்டால் போதும். அரசர் எத்தன்மை வாய்ந்தவராக யிருக்கவேண்டும் – அவரது அரசாங்கம் எது-எதை அடிப்படையாகக் கொண்டிருக்க வேண்டு மென்பது பற்றி நமது பண்டைய நூல்களிலே விரிவாகக் கூறப்பட்டிருக்கிறது.

"சேனை – நாடு – பொருள் – அமைச்சு – நட்பு – அரண் – இவ்வாறு அங்கங்களையு முடையவன் அரச ருள் ஆண் சிங்கமென்கிறார் குறள் ஆசிரியர் திருவள்ளு வர்.

இந்த ஆறில் ஒன்று குறையினும் அவன் அரசனாக மாட்டான்.

நமது அரசரிடத்திலே சேனை யிருந்தது — பரந்த நாடிருந்தது — நாட்டில் விளையும் நல்ல பொருளிருந்தது அநுபவமும் மதிநுட்பமும் வாய்ந்த அமைச்சர் களிருந் தார்கள் — நட்பும் தர்மமுமிருந்தது.

அரசனின் இயல்பைப் பற்றிக் குறிப்பிடும் போது வல்லமை, ஈகை, அறிவு, மனவெழுச்சி அதாவது மன ஊக்க மென்றார்.

நமது அரசரிடம் வலிமை யில்லையா? கொடுக்கும் தன்மை யில்லையா? பரந்த அறிவு இல்லையா? அன்றி மன ஊக்கந்தானில்லையா? எல்லா மிருந்தது. மேலும் வள்ளு வர் "தூங்காமை — கல்வி — துணிவுடைமை" என்றார்.

எந்தக் காரியத்திலேயும் – விழிப்பாகவும் – அதற் கேற்ற கல்வி யறிவும் – வலிமையும் நமது அரசரிடமில் லையா? இருந்தது.

பிறிதோரிடத்தில் வள்ளுவர். 'காண்கைக்கு எழிய வனும் இன்சொற் சொல்லுபவனும் ஆகிய அரசன் நில த்தை உலகம் உயர்த்திச் செல்லு'மென்றார்.

காண்கைக்கு எழிமை என்றார் அவர். நமது அர சரின் வாழ்க்கை — ஏன்? அவரின் உள்ளும் புறமும்

எளிமையாகத் தானே யிருந்தது. "இன்சொல்" என்ருர் அவர். நமது அரசரின் சொல்லிலும் என்? மனத்திலும் இனிமையே யிருந்தது.

வள்ளுவர் மற்று மோரிடத்தில் 'பொருள் வாவு – தேடல் சேர்த்தல் – காத்தல் – அறவழியில் செலவு செய் தலில் வல்லவன் அரசன்' என்ருர்.

ஞாயமான வழிகளிலே பொருள் வரவு தேடவேண் டும்; தேடியதைச் சேர்த்து வைத்து குடிகளைக் காக்க வேண்டும்; அறவழியில் செலவு செய்யவேண்டுமென்பது தான் பொருள்.

இவ்வளவும் நமது அரசரிடத்திலே பொருந்தி யிருந் தது–அரசாங்கம் நல்ல முறையில் நடைபெற்று வந்தது. நாட்டிலே மக்கள் சுபிக்ஷமாக வாழ்ந்து கொண்டிருந்த னர். அவ்வித மெல்லாமிருந்தும் நமது அரசர் தமது அர சுரிமையைத் துறந்து நாட்டைப் பொதுமக்களிடம் ஒப் புவித்தார்–என்ன பெருந்தன்மை! என்ன தியாக உணர் ச்சி!! மக்களிடம் அவருக்குள்ள அன்புதா னென்ன? நமது நாட்டைப் புகழாத பிற நாடுண்டோ? நமது தலை வரைப் போற்ருத மக்களுண்டோ? இந்த இடத்திலே நீங்கள் ஒரு விஷயத்தைக் கவனிக்க வேண்டும்.

மனத்திலும், வாக்கிலும், சிந்தனையிலும், செய்கை யிலும், வறுமைப் பட்டமக்கள் — ஏழைத் தொழிலாள மக்களின் வாழ்க்கை சீரடைவதற்கே உழைத்து வரும் நமது மாபெருந் தலைவர், நாட்டில் சிறு பான்மையோரா யிருப்பவர்களின் நலனை மறந்திருக்கிருரென்ருல் அது

அவரின் குற்றமல்ல. நமது குற்றமே. இங்கு வந்திருக்கும் நீங்கள் எல்லோரும் ஒரு நாட்டின் மக்கள். சகோதர மனப்பான்மை கொண்டவர்கள். உங்களில் ஒருவருக்கு ஏதேனும் கஷ்டமேற்பட்டால், அதை நிவர்த்திக்க வேண்டியது உங்கள் பொறுப்பல்லவா?

பிரஜைகள் பணக்காரர்களாயினும் ஏழைகளாயினும் அந்த அரசாங்கத்தின் பிரஜைகள்தான். எல்லோரும் சம நிலையிலிருப்பதும் முடியாதவிஷயம். பிறக்கும்போது எல்லோரும் சமமாகவே பிறக்கின்றார்கள். அவர்களது வளர்ச்சி—அறிவு—அனுபவம்—அதிர்ஷ்டம் முதலியவைகளுக்கு ஏற்றவண்ணம் அறிஞனாகவோ, முட்டாளாகவோ, பணக்காரனாகவோ, ஏழையாகவோ ஆகின்றார்கள். எனது பிரசங்கத்தைக் கேட்பதற்கு ஆயிரக்கணக்கான பேர்கள் வந்துகூடியிருக்கின்றீர்களிங்கு. நீங்கள் ஒவ்வொருவரும் என்னைப்போலிருந்து விட்டால். இங்கு வரவேண்டிய அவசியம் நேரிடாதல்லவா? நீங்களும் என்னைப்போலாவதற்கு வழி நிறைய உண்டு. ஆனால் நான் உங்களைப்போலாகிவிட வேண்டியது அவசியம் தானா?

சகோதரர்களே!

சிறிதுயோசியுங்கள். ஏழையாயிருப்பவன் கொஞ்சம் பணம் சம்பாதித்தால், பணக்காரனாகி விடுகிறான். இவன் ஏழையாயிருப்பதற்காக, பணக்காரனும் ஏழையாகிவிட வேண்டுமா? இந்த 'பொருள் தேடல்' என்னும் விஷயத்தில் நமது அரசாங்கம் கையாளும் முறை ரொம்பத்தவறானது. இந்த அரசாங்கத்திலிருக்கும்

பணக்காரர்களை ஏழைகளாக்குவதே அதன் நோக்கமாக இருக்கவேண்டும். மகாஜனங்களே! நீங்கள் நாள் முழுதும் உழைக்கின்றீர்கள். ஆனல் உங்கள் உழைப்புக்கு கூலி மட்டுந்தான் கிடைக்கும். என்றென்றும் உங்களுக்கு இதே நிலை தான். உங்களுடைய முயற்சியினலோ, அதிக உழைப்பினலோ, அன்றி அதிர்ஷ்ட வசத்தினலோ, கொஞ்சம் பணம் சேர்த்தால்; அதை வைத்துக்கொள்வதற்கோ, அன்றி அதைக்கொண்டு ஒரு சௌகரியத்தைச் செய்து கொள்வதற்கோ உங்களுக்கு உரிமை யில்லை.

சகோதரர்களே!

இன்று பணக்காரர்களாக யிருப்பவர்களும், இனிப் பணக்காரர்களாக ஆகப்போகிறவர்களும், ஒரே சட்டத்தின்கீழ் சுதந்திரம் – உரிமை இவற்றை இழந்து தவிக்க நேரிடும்.

இதே போன்று குடியரசு நாடாக யிருக்கும் வேறு எந்த நாட்டிலும், பணக்காரன்—ஏழை, தொழிலாளி — முதலாளி என்ற பிரிவினை இருந்து தான் வருகிறது. அதை யொழிப்பதற்கு நம்மாலியலாது.

“எண்ணெ யில்லாது போனல் விளக்கு எரியாது. அதுபோல ஈஸ்வரனில்லாமற் போனல் மனிதன் ஜீவித்திருக்க முடியா”தென்றர் ராமகிருஷ்ணபரமஹம்ஸர்.

அமானுஷ்ய சக்தி யொன்று உலகத்தை இயக்கிக் கொண்டிருக்கிறது. கர்ம பலன் களுக்கேற்றவாறு மனிதனின் வாழ்க்கை அமைகிறது. இதை மானுஷ்ய சக்தியால் மாற்றிவிட முடியுமா?........ முடியாது.

இன்றைய நமது அரசாங்கத்தின் போக்கு நாஸ்தீகத்தை அடிப்படையாகக் கொண்டு விடுமோ வென அஞ்ச வேண்டிய திருக்கிறது. அவ்விதமானல் ஆஸ்தீகத்தை அடிப்படையாகக் கொண்டு ஆன்மீக சக்தியால் பெற்ற நமது பண்டைய நாகரீகத்தை—இன்று உலகம் கண்டு வியக்கும் நமது நாட்டின் சிறப்பை நாஸ்தீகப் பேய்க்குப் பலியிட்டு விடுவதா? இல்லை! ஒருக்காலு மில்லை!! இப்பரந்த நாடு நம்மது. நம்மிடம் அன்பு கொண்ட-நமது நலனையே நாடும் ஒரு தலைவரைப் பெற்றிருக்கின்றோம். நமது விருப்பத்தை ஏற்பது அவர் கடமை. அவரது கடமையை உணர்த்துவது நமது வேலை. எனவே, நமது சகோதரர்களில் சிறுபாண்மையோரா யிருப்பவர்களின் நலனைப்பற்றி தலைவரின் கவனத்துக்குக் கொண்டுவர வேண்டியது நமது வேலைகளில் முதன்மையானது. சகோதரர்களே! இதிலே பணக்காரர்கள், ஏழைகள் என்ற வேறுபாடே வேண்டாம். எல்லோருடைய சுதந்திரத்தையும், உரிமையையும் காப்பாற்றுவதற்கு ஒன்று படுங்கள். உங்கள் கடமையைச் செய்ய முன்னே எழுங்கள்! இதுவே எனது வேண்டுகோள். எல்லோருக்கும் நமஸ்காரம்.

ஞானனந்தர் தமது பிரசங்கத்தை முடித்துக் கொண்டு குடிசைக்குச் சென்று விட்டார்.

அவரின் பிரசங்கத்தால் புதிதாக இயற்றப்பட்ட அரசாங்க சட்ட திட்டங்கள் விஷயமாக அங்கு கூடியிருந்தவர்களின் எண்ணங்கள் வெவ்வேருக மாறின. கூட்டங் கூட்டமாக தங்கள் தங்கள் அபிப்பிராயங்களைப்

பரிமாறிக் கொண்டு சென்றார்கள். அவரின் வேண்டு கோளுக்கு ஆதரவும் அதிகமாயிருந்தது.

அன்றிரவு சாம்பசிவத்திற்கு தூக்கமே வரவில்லை. ஞானனந்தரின் பிரசங்கம் அவனை எங்கெங்கோ கொண்டு சென்றது. அதன் பொருளை — அவரின் நோக்கத்தை யவனால் அறிந்து கொள்ள முடியவில்லை. "அரசன் — அரசியல் என்று ஆரம்பித்தார் — வள்ளுவரின் பொன்மொழிக்கு நமது அரசர் — குடியரசின் தலைவரை உவமையாக எடுத்துக்கொண்டார்; தலைவரை —அவரது தியாகத்தை அபாரமாகப் புகழ்ந்தார், கடைசியில் சிறுபான்மை யோரென்னும் பெரிய பிரிவினையைக் கொண்டுவந்து புகுத்தி விட்டாரே! உலகப் பற்றற்ற இந்த ஞானி சிறுபான்மை யோராகிய பணக்காரர்களின் நலனுக்கு இதர மக்களும் போராடா விட்டால், அவர்களுடைய கதியும் பிறகு இவ்விதந் தானாகுமென்று பயமுறுத்தி விட்டாரே! உண்மையிலே இவர் அக் கூட்டத்தாரின் பிரசாரக்கருவியா?"

இதை மட்டும் அவன் மனம் ஒப்புக் கொள்ளவில்லை. காரணம் ஞானனந்தரிடம் அவனுக்குள்ள பக்தி. "இந்த நாட்டிலே பிறந்த எவர்க்கும் எக்குறைவு மிருக்கக்கூடாதென்ற சமத்வ நிலையை வலியுறுத்துவதே அவரது பிரசங்கத்தின் நோக்கம்."

இப்படியாக கேள்வியும் — பதிலும். சந்தேகமும் — சமாதானமும், மாறி மாறித் தோன்றிக் கொண்டிருந்தன. அப்போது மணி பன்னிரண்டிருக்கும் — ஏதோ ஆள் நடமாடும் அரவங்கேட்டு, சுற்றிலும் பார்த்தான்.

ஞானனந்தர் படுக்கையை விட்டெழுந்து ஒரு போர்வையால் தன்னை மூடி மறைத்துக்கொண்டு மெதுவாக அடிமேலடி வைத்து நடந்து குடிசையை விட்டு வெளியேறினர்.

அவரைப் பற்றி இப்போது தான் சந்தேகப்பட்டு, சமாதான மடைந்திருந்த அவனுக்கு அவரின் செய்கை ஆச்சரியத்தை விளைவித்தது. சந்தேகப்பேய் மீண்டும் தலைகாட்டியது. அவரின் நடவடிக்கையை அறிய ஆவல் கொண்ட சாம்பசிவமும், மெதுவாக எழுந்து அவரைப் பின் தொடர்ந்தான்.

ஞானனந்தர் குடிசையை யடுத்துள்ள கோவிலுக்குள் சென்ருர். அங்கே இவரின் வரவை எதிர்பார்த்துக் காத்திருந்த ஒருவன் இவரைக் கண்டதும் கிட்ட நெருங்கி, "சுவாமி! தலைவரும் — மந்திரியும் இரவு 10-மணிக்கு செங்காட்டு மாளிகைக்குப் புறப்பட்டுச் சென்றனர்." என்ருன்.

ஞானனந்தர் திடுக்குற்று "என்ன இரவு 10-மணிக்கா.? சாயந்திரம் 4-மணிக் கல்லவோ புறப்பட்டுப் போவதாக எனக்கு அறிவித்தாய்?"

"உண்மை 4-மணிக்கு செங்காட்டு மாளிகைக்குப் புறப்பட்ட இருவரும் 6-மணிக்குத் திரும்பிவந்து மீண்டும் 10 மணிக்கு புறப்பட்டனர்."

"செங்காட்டு மாளிகைக்குச் சென்று திரும்பி வந்துவிட்டார்களா! ஏனிதை உடனே எனக்குத் தெரிவிக்கவில்லை." என்ருர் கோபமாக.

"அங்கு நடப்பவைகளை ஜாக்ரதையாகக் கவனிக்கும் படிதானே எனக்கு உத்தரவிட்டீர்கள். அதனால், அங்கு நடந்தவைகளைக் கவனித்திருந்து வழக்கப்படி வரும் நேரத்திற்கு வந்தேன்." என்றான் பணிவுடன்.

சிறிது கோபந்தணிந்தவராய். "ஆம் உண்மை........ இதில் ஏதோ சூது நடந்திருக்கிறது....சரி. இனி அங்கு நடக்கும் விஷயங்களை உடனுக்குடன் எனக்குத் தெரிவிக்க வேண்டும். தெரிகிறதா?" என்றார்.

"உத்தரவு" என்றான் அந்த ஆள்.

"சரி நீ போ." எனக்கூறி யவனை அனுப்பிவிட்டு கோவிலினின்று வெளிப்பட்டார்.

இங்கு நடந்தவைகளை மறைந்து நின்று கேட்டுக் கொண்டிருந்த சாம்பசிவம், பிரம்மித்து அப்படியே சில நிமிஷங்கள் நின்று விட்டான்.

அவனது சந்தேகம் ஊர்ஜித மாயிற்று. ஏதோ சதியாலோசனை நடைபெறுவதையும் கண்டான். மறைவிடத்தை விட்டு வெளியே வந்த ஞானனந்தர் குடிசைக்குச் செல்லாது நகரை நோக்கிச் செல்வதைக் கண்டு, இவனும் அவரைப் பின் தொடர்ந்தான்.

நகரை நோக்கி விரைந்து சென்ற ஞானனந்தர் நகரின் தென்புற மிருந்த ஓர் பாழடைந்த சத்திரத்தில் புகுந்தார். அவரைப் பின் பற்றி வந்த சாம்பசிவம், பாதி அளவு இடிந்துகிடந்த அக் கட்டிடத்தின் பக்கச் சுவற்றிலேறிக் குதித்து, உள்ளே சென்று மறைந்து கொண்டான்.

சற்று நேரத்தில் மூன்ருவதொருவன் அக் கட்டிடத்திற்குள் நுழைந்து ஞானனந்தரின் சமீபம் சென்று உற்றுப் பார்த்து விட்டு, "சுவாமிகளா! எங்கே சந்திக்க முடியாது போய் விடுகிறதோ வெனச் சந்தேகித்தேன். விஷயம் முடிந்தது. நாளை முதல் துரிதமாக வேலையை ஆரம்பிக்க வேண்டியது தான்." என்ருன் மகிழ்ச்சியுடன் அம்மனிதன்.

"கார்த்தவராயா! நீ ஏமாந்து விட்டதை யறியாமல் சொல்லுகிருய்" என்ருர் ஞானனந்தர்.

"என்ன! ஏமாந்து விட்டேனு? அதெப்படி முடியும் சுவாமி? உங்களுடைய குறிப்பிலிருந்தபடி – குறிப்பிட்ட நேரத்தில் – குறிப்பிட்ட இடத்தில் – இருவரையும் சுட்டேனே! இருவரும் சூடுபட்டு காரிலேயே விழுந்ததைக் கூடப் பார்த்தேனே!!.

"நீ சுட்டதும் உண்மை. அவர்கள் விழுந்ததும் உண்மை. நீ யாரைச் சுட வேண்டுமோ, அவர்களைச் சுடவில்லை."

"என்ன சுவாமி இப்படிச் சொல்லுகிறீர்கள்? அவர்களைக் கவனித்துப் பார்த்த பிறகல்லவோ சுட்டேன்."

"அவ்விதமானுல், அவ்விருவரும் காரியாலயத்திற்கு திரும்பி வந்து மீண்டும் 10-மணிக்கு செங்காட்டு மாளிகைக்குச் சென்றிருக்க முடியுமா.?"

" யார்! அவ்விருவருமா திரும்பி வந்தார்கள்!!" என்ருர் ஆச்சரியத்துடன் காத்தவராயர்.

ஞானனந்தர் சிறிது நேரம் மௌனமா யிருந்தார். பின், "காத்தவராயா! நமது சங்கத்தின் முடிவு எப் படியோ அவர்களுக்குத் தெரிந்துதான் உன்னை ஏமாற்றி யிருக்கிறார்கள். நீ சுட்டது அவர்களைப்போல் வேஷந் தரித்த வேறு இருவரையாகவே யிருக்கவேண்டும். நன் ருகக் கவனித்துப் பார்த்திருந்தால் தெரிந்து கொண் டிருக்கலாம். அவர்களுடைய பொதுத் தோற்றத்தைக் கண்டு ஏமாந்து விட்டாய். அதோடு பெண் மோகம் வேறு பிடித்திருக்கிறது."

"அதெல்லா மில்லை சுவாமி. ஏமாந்து விட்டே னென்று நீங்கள் சொல்வது தான் எனக்கு ஆச்சரியமா யிருக்கிறது."

"ஆச்சரியமென்ன? உண்மைதான். பெண்களிடம் மனதைப் பறிகொடுத்த ஒருவனுக்கு கடமையில் எங்ங னம் கவனஞ் செல்லும்? உன் கவனமெல்லாம் வேறெங்கோ சென்றிருந்ததினாலேயே இந்த தவறு ஏற் பட்டிருக்கிறது. சரி போனது போகட்டும். எப்படியோ நம்முடைய ரகஸ்யம் அவர்களுக்குத் தெரிந்து விட்டது. நாம் முந்திக் கொள்ளா விட்டால், நம்மை அழித்து விடு வார்கள். ஜாக்ரதை! நமது சங்கத்தின் நான்காவது விதி யின்படி ஒருவாரம் உனக்குத் தவணை கொடுக்கப் பட் டிருக்கிறது. அதற்குள் உனது கடமையை நிறைவேற்ற வில்லை யென்றால், உனது உயிரை இழக்க நேரிடும்." எனச் சற்று கோபமாகக் கூறினார்.

"சுவாமி! கல்யாணஞ் செய்துகொள்ள வேண்டு மென்ற ஆசையிருந்தது என்னவோ உண்மை. அதற்காக

எனது கடமையை மறந்து விடுவேனு? இந்த உலகிலே நம்மை யறிந்தவள் ஒருவளிருந்தா ளென்றுல் நீங்கள் ஆச்சரியப் படுவீர்கள். அவள்தான் என் மனைவி. இதேநகரத்தி லிருந்து வந்தாள். பிருந்தாவனத்தை நடத்திக்கொண்டிருந்த கமலாதேவி என்பவள்தான் அவள். சுவாமிகளுக்கு இந்த உண்மை தெரிந்திருக்காது........"

"யார்! பிருந்தாவனத் தலைவி உன் மனைவி அமிர்தமா?"

"ஆம் அவள் தான். சில வருஷங்களுக்கு முன் ஒரு முறை பிருந்தாவனத்திற்குப் போயிருந்தேன். முதலில் என்னுல் அவளைக் கண்டு கொள்ள முடியவில்லை. அவள் என்னைத் தெரிந்து கொண்டாள். முற்றும் வேறுபட்ட நிலையிலிருக்கும் அவள், நம் விஷயத்தில் தலையிட மாட்டா ளென்று நினைத்தேன். அதுபோல் இதுவரைத் தலையிடவுமில்லை. ஆனுல், இன்று பிற்பகல் என் வீட்டுக்கு வந்தாள். நமது சதியாலோசனை அவளுக்குத் தெரிந்தோ, அன்றி அவள் நம்மீது சந்தேகங் கொண்டோ கடுமையாகப் பேசினுள். அரசாங்கம் நம்மீது சந்தேகப் படுவதாகவும் சொன்னுள். பின்னும் ஏதேதோ கன்னுப்பின்னு வென்று உளறி விட்டு தலைவரிடம் போய் தன்னைப்பற்றிய உண்மையை ஒப்புக்கொள்ளப் போவதாகச் சொன்னுள். அவள் அவ்விதம் ஒப்புக் கொண்டால், அது நம்மைப் பாதிக்காம லிருக்குமா? நமக்கு எதிரியான அவளை ஒரே குத்தில் மேலுலகத்திற்கு அனுப்பிவிட்டேன்."

"பேஷ்! காத்தவராயா!! அந்தக் காலத்திலே சாணக்கியன் தனது காலைத் தடுக்கிய புல்லை வேருடன் களைந்த மாதிரி செய்து விட்டாயே!"

"எதற்காகச் செய்தேன்?........நம் முன்னிற்கும் கடமைக்காகவே. ஏதோ இந்த விஷயத்தில் தவறு நடந்து விட்டதாகச் சொல்லுகிறீர்கள். அவ்விதமானல் இனி நான் என்ன செய்ய வேண்டுமென்பதற்கு யோசனை சொல்லுங்கள்."

"சொல்லுகிறேன். உன் வீட்டில் உனது நடவடிக்கையைக் கவனிக்கும் யாரோ ஒருவனிருக்க வேண்டும். அன்று உன் வீட்டில் நடந்த கூட்டத்தின் நடவடிக்கைகளைத் தெரிந்து, எச்சரித்ததினுல் தான், அவர்கள் உன்னை ஏமாற்றி யிருக்கிருர்கள். அது விஷயத்தில் நீ ஜாக்ரதையாக யிருக்கவேண்டும்."

அப்படி யொருவருமில்லை சுவாமி........(யோசனையுடன்) இருந்தால், அவர்களையும் ஒழித்து விடுகிறேன். இதற்கு யோசனை சொல்லுங்கள்."

"அவர்களிப்போது விழிப்படைந்து விட்டார்கள். காரியாலயத்திலும், அவ்விருவர் இல்லங்களிலும் சென்று நாம் எதையும் செய்யமுடியாது........உம்........ இருபதாந்தேதி சனிக்கிழமை, "குடியரசு தினக்" கொண்டாட்டம் நடைபெறுகிறது. அப்போது நடைபெறும் வேடிக்கை விளையாட்டுகளில் தலைவர் – உத்யோகஸ்தர்கள் எல்லோரும் கலந்து கொள்வார்கள். பல ஆயிரக் கணக்கான ஜனங்கள் கூடியிருப்பார்கள். கூட்டத்தினரில் நீனும் ஒருவனுயிருந்து சமயம் பார்த்து அவர்களைச்

சுடவேண்டும். சுட்டதும், ரிவால்வரை உனக்குப் பின் புறம் சிகப்பு வில்லையணிந்து நிற்கும் நமது ஆட்களில் ஒருவனிடம் கொடுத்துவிட்டு கூட்டத்தில் மறைந்துவிடு. தைரியமாக இந்த வேலையைச் செய்யவேண்டும் தெரிகிறதா? ஒருக்கால் அகப்பட்டுக் கொண்டால்............"

"உயிரற்ற கட்டையை அவர்களிடம் ஒப்புவிக்கிறேன்" அதற்குள் நான் கைதி செய்யப்பட்டாலோ....

"அன்றே நமது லக்ஷியம் நிறைவேறிவிடும். அதைப் பற்றி நீ கவலைப்படவேண்டாம். உன் வீட்டிலுள்ள ஐந்தாம் படை ஆளைக்கண்டு பிடித்து தீர்த்துவிடு. இனி எந்த விஷயத்திலும் எச்சரிக்கையாக இருக்க வேண்டும்........சரி நீ போய் வா" எனக் கூறினார் ஞானனந்தர்.

காத்தவராயரும் அவ்விதமே செய்வதாகக்கூறி அந்த சத்திரத்தை விட்டு புறப்பட்டு நகரை நோக்கிச் சென்றார்.

அவர் சென்ற சில நிமிஷங்கள் வரை, ஆழ்ந்த யோசனையிலிருந்த ஞானனந்தர் சட்டென்று எழுந்து பூனே மேட்டை நோக்கிப் புறப்பட்டார்.

பிருந்தாவனத்தின் தலைவி காத்தவராயரின் மனைவி என்பதை யறிந்ததும் வியப்பும் திகைப்பு மடைந்தான் சாம்பசிவம். இருப்பினும், தலைவி கொலையுண்டார் களென்பதை யறிந்த அவன் மனம் துடித்தது, தேகம் பதறியது, மறைவிடத்தை விட்டு வெளிவந்து விரைந்து நகரை நோக்கி யோடினான்.

பல பயங்கர நிகழ்ச்சி களடங்கிய அந்த இரவு தொலைந்து புதுநாள் பிறந்த தென்பதை மக்களுக்கு அறிவுறுத்தினன் உதயசூரியன்.



## அத்தியாயம் 10

### சாம்பசிவத்தின் — சமய உதவி

கோகிலம் படுக்கையை விட்டெழுந்து வெளியே வந்த போது, சிறிது தூரத்தில் தன் தந்தை வருவதைப் பார்த்து ஆவலுடன் ஓடிப்போய் அவரது கரங்களைப் பற்றிய படியே "அப்பா! இவ்வளவு அதி காலையிலே எங்கிருந்து வருகிறீர்கள்?" என்றாள்.

"பூனைமேட்டிலிருந்து வருகிறேனம்மா. தலைவி எங்கே?" எனப் பதட்டத்துடன் கேட்டான் சாம்பசிவம்.

"ஏனப்பா இவ்வளவு பதட்டம்? அவர்கள் வெளியூர் சென்றிருக்கிறார்கள்."

"வெளியூருக்கா! உனக்கு நன்றாய்த்தெரியுமா?"

"அவர்கள் போகும்போது என்னிடம் ஒன்றும் சொல்ல வில்லை. ஆனால், நேற்று சாயந்திரம் தினகரரிடமிருந்து ஒரு கடிதம் வந்தது. அதில் தலைவி ஒரு காரியமாய் வெளியூர் போயிருப்பதாயும் திரும்ப ஒரு வாரம் ஆகுமென்றும் எழுதியிருந்தார்கள்."

"தினகரன் எங்கே. இங்கில்லையா?"

"அவரிப்போது இங்கு வேலை செய்ய வில்லை. அரசாங்க துப்பு இலாக்காவில் வேலைபார்க்கிறார்."

"அப்படியா! அக்கடிதம் தினகரன் எழுதியது தானென்பது உனக்கு நிச்சயமாய் தெரியுமல்லவா?"

"நன்றாய்த் தெரியும். அவர் எழுதியது தான். அதோடு, இன்று காலையில் இங்கு வருவதாகவும்

எழுதி யிருக்கிறார். ஏனப்பா இப்படிக் கேட்கிறீர்கள்?"

"வேறென்று மில்லை (ஆழ்ந்த யோசனையுடன்) தினகரனுடைய கடிதத்தை நம்புவதா? எனது செவிகளை நம்புவதா? என்பதுதான் எனக்கு விளங்கவில்லை?"

"ஏன்! அப்படி என்னப்பா நேர்ந்தது?"

"கோகிலம்! தலைவியைக் காத்தவராயன் கொலை செய்து விட்டதாக அவனே சொன்னான். அப்படியிருக்க அவர்கள் வெளியூர் போயிருப்பதாக தினகரன் எழுதி யிருக்கிறானென்று நீ சொல்லுகிறாய். எதை நம்புவது?"

"யார்! காத்தவராயரா தலைவியைக் கொலை செய்து விட்டார்!!" என நடுக்கத்துடன் கேட்டாள் கோகிலம்.

"ஆமா கோகிலம்! உனக்கு முழுவிபரமுஞ் சொல்லுகிறேன். (ஞானனந்தரின் பிரசங்கத்தால் சந்தேகமேற்பட்டது; அதன்பின் நடந்த எல்லா வற்றையும் சொல்லி) கோகிலம்! இவ்வளவையும் என் கண்களால் பார்த்து, காதுகளால் கேட்டபிறகு இதில் தவறு எதுவுமிருக்க முடியுமா?"

"அப்பா! நீங்கள் கேட்டதிலும் தவறிருக்காது; தினகரரும் தவருக ஒன்றும் எழுதமாட்டார். தலைவி காத்தவராயரின் மனைவி என்பதுதான் எனக்கு பெருத்த ஆச்சரியத்தைக் கொடுக்கிறது. தினகரர் இப்போது வந்து விடக்கூடும். எது உண்மை என்பது

இன்னும் சற்று நேரத்தில் தெரிந்து விடும். வாங்கப்பா உள்ளே போவோம்.” எனக்கூறி அவனை அழைத்துக் கொண்டு உள்ளே சென்ருள். ஸ்நானபானுதிகளை முடித்துக் கொண்டு காரியாலய அறைக்கு வந்து பேசிக் கொண்டிருந்தனர். அவர்கள் சில நாட்களே பிரிந்திருந்தாலும் ஆவல் என்னமோ அதிகமாகத்தா னிருந்தது. பற்பல விஷயங்கள் பற்றி ஓயாது பேசிக் கொண்டிருந்தார்கள்.

சரியாக மணி 8 அடிக்கும் சமயம் தினகரன் அங்கு வந்தான். வந்தவன் சாம்பசிவத்தைப் பார்த் ததும் வியப்புடன் “மாமா! பூனேமேட்டிலிருந்து எப் போது வந்தீர்கள்? உங்கள் கடிதத்தைப் பார்த்து கோகிலம் எவ்வளவு வருத்தமடைந்தாள் தெரியுமா?” என்ருன் சிறு நகைப்புடன் கோகிலத்தைப் பார்த்துக் கொண்டே.

“அதெல்லா மில்லையப்பா. அவர் சும்மா சொல்லு கிருர். வருத்த மிருக்கத்தானே செய்யும்.” என்ருள் கோகிலம்.

“அவன் அதைத்தானே அம்மா சொல்லுகிருன். வருத்தப் பட்டிருப்பாய். ஒருக்கால் அழுது மிருக் கலாம், உன்னை வருந்தச் செய்வதா எனது நோக்கம்? போவதற்கு முன் உன்னைப் பார்ப்பதால் எனது உறுதி தளர்ந்து விடுமோவென அஞ்சினேன்.” என் ருன் சாம்பசிவம்.

“ஆமாம்! அவ்வளவு உறுதியுடன் போனீர்களே அங்கே; உலக இயல்பற்றி யெல்லாந்தெரிந்து

கொண்டு வந்து விட்டீர்களா? அல்லது பூனைமேட்டின் வாசம் பிடிக்காமல் வந்து விட்டீர்களா?" எனக் கேட்டான் தினகரன்.

"அதைப் பற்றி விரிவாகச் சொல்லுகிறேன். முதலில் தலைவி எங்கு போயிருக்கிறார்களென்பதைச் சொல்."

"ஏன் கோகிலம் சொல்லவில்லையா? வெளியூருக்குப்போயிருக்கிறார்களென்று எழுதியிருந்தேனே?"

"சொன்னாள். இருந்தாலும் உன்னிடமுங் கேட்டுத் தெரிந்து கொள்ள வேண்டுமென்ற ஆவல். அவர்கள் எங்கு போயிருந்தாலும் சரி உயிருடனிருக்கிறார்களல்லவா?"

தினகரன் வியப்படைந்தான். அவர்கள் உயிருக்கு அபாயம் ஏற்பட்டது இவருக்குத்தெரியுமா? நாம் கோகிலத்திற்குக் கூடச் சொல்ல வில்லையே? என யோசித்தவனாய், "உங்களுக்கேன் இந்த சந்தேகம்?" என்றான் தினகரன்.

"உன்னுடைய கடிதமே எனக்கு சந்தேகத்தைக் கொடுத்தது (நடந்தவைகளை விவரித்து) இதில் எது உண்மை? எனக் கேட்டான் சாம்பசிவம்.

சாம்பசிவம் கூறியவற்றைக் கவனிப்புடன் கேட்ட தினகரன் "மாமா! உங்களுடைய இந்தப் பெரிய—சமய உதவியால் எனது வேலை சுலுவாகி விட்டது. சுமார் 25 வருஷங்களுக்கு முன், சிறையிலிருந்து தப்பியோடிய கைதிகளான உக்கிரமசிங்கனென்பவனும்,

நஞ்சப்பனென்பனும், பல வருஷங்கள் வெளி நாடுகளில் சுற்றித்திரிந்தபின் முகத்தோற்றத்தை முழுதும் மாற்றிக் கொண்டு இதே நகருக்குவந்து, மக்களோ — அரசாங்கமோ தங்களைச் சந்தேகிக்கா வண்ணம் வசித்து வருகின்றனர். இருவரும் முன்னேற்பாட்டின்படி ஒருவருக் கொருவர் தொடர்பு வைத்துக் கொண்டிருக்கின்றனர். இவர்கள் சிறையிலிருந்து தப்புவதற்கு உதவி செய்த நஞ்சப்பனின் மனைவி சுமார் 12 வருஷங்கள் வரை அவனுடன் வசித்து வந்தாள். இவர்களுக்கு ஒரு புதல்வனிருந்தான். அவனுக்கு இவர்கள் பெற்றோர்களென்பதைத் தவிர இவர்களைப் பற்றிய உண்மைகள் எதுவும் தெரியாது. தகப்பனுடைய அடியொதைக்கும் தாயினுடைய அன்பற்ற வெடுவெடுப்பான பேச்சிற்கும் தினமும் ஆளானான். இந்த நிலையிலே ஒரு நாள் தகப்பனுடைய குடிவெறியால் அடி பலமாக விழுந்துவிடவே, அச் சிறுவன் வீட்டை விட்டு ஓடிவிட்டான். அவன் வீட்டை விட்டுச் சென்றதும்தான் அவனுடைய தாய்க்கு அவன்பால் இரக்கமும் அன்புமேற்பட்டது. தன் கணவனுடைய செய்கையில் வெறுப்புற்ற அவள், அவனை விட்டுப் பிரிந்து இந்த நகரத்திற்கு வந்து கமலாதேவி என்னும் புனை பெயரில் பிருந்தாவனத்தை ஆரம்பித்தார்கள். தனது செய்கைகளுக்குப்பிராயசித்தமா யிருக்குமென்று நினைத்தார்கள் போலும்!

நஞ்சப்பன், காத்தவராயர் என்ற பெயரில் பிரபுக்களுடன் பிரபுவாயும், உக்கிரமசிங்கன் ஞானனந்தர்

என்னும் பெயரில் பொதுமக்களிடையே ஓர் அரிஞ ஞயும் புகழுடைந்தனர். தலைவர் ஜெயசிங்கரிடமும் மந்திரி தர்மசீலரிடமும் இவர்களுக்குள்ள வஞ்சத்தைத் தீர்த்துக் கொள்வதற்காகவே ஒரு சந்தர்ப்பத்தை எதிர் பார்த்திருந்தனரிருவரும் பல வருஷங்களாக. அந்த சமயத்தில் அமுலுக்குவந்த அரசாங்க சட்டங்களைக் காரணமாகக் கொண்டு, அச்சட்டங்கள் அரசாங்கம் பிரபு வர்க்கத்தினருக்குச் செய்த அநீதியென்றும்; அவைகளை எதிர்ப்பதற்கு பிரபுக்கள் எல்லோரும் ஒன்று பட வேண்டுமென்றும், பிரபுக்களிடையே இடை விடாது பிரசாரஞ்செய்து அவர்களையெல்லாம் ஒன்று சேர்த்து "பிரபுக்கள் ஐக்கிய சங்க" மென்றும் "மத்திய சங்க" மென்றும் இருபிரிவாக்கி இவ்விருவரின் தலைமை யிலும் மத்திய சங்கத்தார் நேரிடையாக அரசாங் கத்தை எதிர்ப்பதென்று, சமயம் நேரிட்டால் தலைவரை யும் மந்திரியையும் கொலைசெய்து விடுவதென்றும்; (அது தான் அவர்கள் சங்கத்தின் நான்காவது விதியாகும்.) அதே நிலையில் ஐக்கியசங்கத்தார் அதாவது ஞானனந்த ரென்னும் உக்கிரமசிங்கன் பொதுஜனங்களின் மன திலே அரசாங்க சட்ட திட்டங்கள் பற்றி தனது பிரசங்க வன்மையால் பெரிய குழப்பத்தையும் கிளர் ச்சியையும் உண்டு பண்ணினல், அரசாங்கத்தைக் கைப் பற்றுவது எளிதாகுமென்றும் தீர்மானித்து அதற்கு சில திட்டங்களை வகுத்துக் கொண்டு துரிதமாய் வேலை செய்து வந்தனர். இந்த சந்தர்ப்பத்தில் இது பற்றி மந்திரி தர்மசீலருக்கு சில தகவல் கிடைக்கவே, அவர்

சந்தேகப்பட்டு இதைக் கவனிக்கும்படி எங்கள் இலாகாவிற்கு தகவல் அனுப்பினர். எங்கள் தலைவர் இதை என்னிடம் ஒப்புவித்தார். (காத்தவராயரின் வீட்டுக்கு ரேகை சாஸ்திரியாகச் சென்றது — மறுநாள் ராயப்பனின் தம்பி வீரப்பனாகச் சென்றது — கார் ட்ரைவர் வேலை பார்த்தது—கோகிலத்தின் கல்யாண விஷயமாய் தலைவியை யழைத்து காத்தவராயர் கேட்டது—கோகிலம் கட்டிடநிதி வசூலுக்கு வந்தது—முதலிய விபரங்களைக்கூறி மேலும்) காத்தவராயருக்கும் தலைவிக்கும் நெருங்கிய சம்பந்தமிருந்திருக்கிறதென்பதையறிந்ததும் எனக்கு அதிக சந்தேகமேற்பட்டது. அவரின் நடவடிக்கைகளை அதிக ஜாக்கிரதையாகக் கவனித்து வந்தேன். அப்பொழுது காத்தவராயர் ஊரிலுள்ள பிரபுக்களுக்கெல்லாம் ஒரு இரவு விருந்து நடத்தினர். விருந்து நடத்துவதற்கான விசேஷங்களொன்றுமில்லை. விருந்து என்ன காரணத்திற்காக நடத்துகிறாரென்று ராயப்பனைக்கேட்டதற்கு; காரணமொன்றுமில்லை யென்றும், மாதம் ஒரு முறையோ இரண்டு முறையோ இவ்வித விருந்து நடைபெறுமென்றும், விருந்து முடிந்ததும் பாதி ராத்திரிவரை ஏதேதோ பேசிக் கொண்டிருப்பார்களென்றும், அப்போது யாரும் அந்த மண்டபத்திற்குப் போகமுடியாதென்றும், தான் இவைகளைப்பற்றிக் கவனிப்பதில்லை யென்றும் சொன்னான். உண்மையிலேயே ராயப்பன் எதிலும் கவலையில்லாதவன். வெள்ளையான மனிதன். ஆனல் கொஞ்சம் முரடன். எஜமானரிடம் பக்தி கொண்டவன். அவனுண்டு அவன் வேலையுண்டு.

பிறவிஷயங்களைப் பற்றித் தெரிந்து கொள்ளப் பிரியப் படாதவன். எதையும் அவன் நம்பும்படி செய்துவிட்டால், அவனை மாற்றவே முடியாது. விருந்து விஷயமாக அவன் சொன்னதைக் கேட்டதும், விருந்தின் நடவடிக்கைகளைத் தெரிந்து கொள்ள நினைத்தேன். விருந்து மண்டபத்தில் ஏராளமான மின்சார விளக்குகளைப் பொருத்தி; அதிகப்படியான பிரகாசத்தைக் கொடுத்து, படம் பிடிக்கும் கருவியையும் அவர்களின் சம்பாஷணையைப் பதிவு செய்யும் கருவியையும் இணைத்து வைத்தேன். விருந்து முடிந்து எல்லோரும் சென்றதும், எனது இயந்திர மூலமாக (விருந்தன்று நடந்த கூட்ட நடவடிக்கைகளை விவரித்து) இவ்வளவு விஷயங்களையும் தெரிந்து கொண்டேன். ஆனாலும் அவர்களின் ஐக்கிய சங்கத்தைப்பற்றிப் பூரா விபரமும் எனக்குக் கிடைக்கவில்லை. எனவே, காத்தவராயரின் அறையில் நடப்பவைகளை உடனுக்குடன் தெரிந்து கொள்வதற்காக "டெலிவிஷன்" யந்திரத்தை அவர் அறையில் இணைத்து வைத்திருக்கிறேன். நேற்று பிற்பகல் தலைவி அங்கு வந்தார்கள். என்னது அறையிலிருந்து, நானும் ராயப்பனும் காத்தவராயரின் அறையில் நடந்தவைகளை டெலிவிஷன் மூலம் பார்த்துக் கொண்டிருந்தோம். (அவர்களுடைய சம்பாஷணை முழுவதையும் சொல்லி) காத்தவராயர் அறையைப் பூட்டிக் கொண்டு சென்றதும், நானும் ராயப்பனும் வேறு சாவி போட்டு அறையைத் திறந்து சுரங்கத்தில் கிடந்த தலைவியைத் தூக்கி எனது தலைவரின் இல்லத்திற்கு

கொண்டு வந்தோம். கத்திக்குத்து அவர்களின் வலது தோளில் விழுந்து ரத்தப் பெருக்கதிகமாக யிருந்ததால் மயக்க மடைந்திருந்தார்கள். உடனே வைத்திய உதவி செய்தோம். இன்று அவர்களுடைய நிலைமை கொஞ்சம் அபிவிருத்தி. உயிருக்கு அபாயமில்லை. இது விபரத்தை கோகிலத்திற்கு எழுதினால், பதட்ட முறுவாளே என்றுதான் வெளியூர் போயிருப்பதாக எழுதினேன். ராயப்பனுக்கு காத்தவராயரிடமுள்ள மதிப்பும் பக்தியும் எங்கோ போய் விட்டது. தலைவியைக் காத்தவராயர் குத்தியபோது நான் இவன் கையைப் பிடித்து நிறுத்தியிராவிட்டால், அவரை ஒரே அடியில் அடித்துக் கொன்றிருப்பான். அவனுக்கு ரொம்ப சமாதானம் சொல்லி வைத்தேன். இன்று அவன் நமது ஆளாக அங்கே வேலை பார்க்கிறான். அவனிடமிருந்து காத்தவராயர் தப்புவது அறிது. மாமா! நீங்கள் சொல்லிய விஷயங்களால் ஞானனந்தர் இவர்களின் ஐக்கியசங்கத் தலைவர் என்பது நிச்சயமாகி விட்டது. அவன் உக்கிரம சிங்கன் என்பதில் சிறிதும் சந்தேகமில்லை. நேற்று மாலை காத்தவராயரின் அறையை சோதனை செய்து சில கடிதங்களை எடுத்தேன். அதில் தாங்கள் பல வருஷங்களுக்குமுன் முடிவு செய்த ஓர் விஷயத்தையும் இந்த மாதிரியான சங்கத்தை ஏற்படுத்த வேண்டிய அவசியத்தை வற்புறுத்தியும் காத்தவராயருக்கு "உக்கிரமன்" என்பவனால் எழுதப்பட்டிருந்தது. இவைகளையும், நீங்கள் சொல்லியதையும் ஒப்பிட்டுப் பார்த்தால் "உக்கிரமன்" என்பவன் உக்கிரமசிங்க

னென்றும், அவனேதான் ஞானனந்தரென்பதும் புல னுகிறது. ஐக்கிய சங்கத்தைப் பற்றிய முழு விபரமும் இதுவரைக் கிடைக்காததினுலேயே காக்தவராயரைக் கைதி செய்யாதிருந்தேன். இனி அவர்களே விட்டுவைத் தால், அபாயம் எற்படுவது நிச்சயம். மாமா! நீங்கள் ஒரு உதவி செய்ய வேண்டும். ஞானனந்தர் உங்க ளிடம் அன்புடையவரென்று நீங்கள் சொல்லுகிறீர்கள். அரசாங்கத்தின் செய்கையை நீங்களும் கண்டிப்ப தாகவும், அதை எதிர்ப்பதற்கு ஒரு இயக்கத்தை ஆரம்பிக்க வேண்டு மென்றும் சொல்லி அவருடைய பூரண நம்பிக்கையைப் பெற்று அவரின் நடவடிக்கை களே அதி ஜாக்கிரதையாகக் கவனித்துக் கொள்ளுங்கள். அவர்களெல்லோரும் "குடியரசு தினத்" தன்று ஒன்று கூடுவார்கள். அந்த சந்தர்ப்பத்தை நான் பயன்படுத்திக் கொள்ளுகிறேன். உங்களுடைய உதவிக்கு வந்தனம்." எனக்கூறி எழுந்தான்.

அவன் சொல்லிய வரலாற்றைக் கேட்ட இரு வரும் அவனுடைய திறமைக்கு வியந்தனர்.

"நானும் வருகிறேன். படுத்த படுக்கையிலேயே கிடக்கும் அவர்களுக்கு ஒரு பெண்ணினுடைய உதவி தேவையாக யிருக்குமல்லவா?" என்ருள் கோகிலம்.

"கோகிலம்! அவர்களுக்கு உதவிசெய்யப் பணிப் பெண்களிருக்கிருர்கள். அதோடு வெளியார் யாரும் அவர்களைப் பார்ப்பதற்கோ, அவர்களுடனிருப் பதற்கோ அநுமதியில்லே. அவர்கள் அரசாங்கத்தின்

கைதி. அவர்கள் நமது மதிப்பிற்குரிய தலைவிதான் எனினும், அரசாங்கம் அவர்களிலும் மேலான தல்லவா?" என்றான் தினகரன்.

கோகிலம் எதுவும் பதில் சொல்லவில்லை. தினகரன் மேலும் "காத்தவராயன்தான் நஞ்சப்பன் என்பதை நிரூபிக்க தலைவியின் சாக்ஷியம் ரொம்ப முக்கியம். அதோடு அவர்கள் இன்றைய நிலையும் கவனிக்கத்தக்கது. தலைவரின் அபிப்பிராயம் எப்படியோ? யார் அறிவர்?" என்றான்.

"தலைவரையும் மந்திரியையும் எவ்விதம் காப்பாற்றினாய்?" எனக் கேட்டார் சாம்பசிவம்.

"இவர்களின் மத்திய சங்க முடிவை யறிந்ததும் எனது தலைவருக்குத் தெரிவித்தேன். அவரின் ஏற்பாட்டின்படி, தலைவர் ஜெயசிங்கரும் மந்திரி தர்மசீலரும் குறிப்பிட்ட நேரத்தில் "செங்காட்டு மாளிகை"க்குச் செல்வதற்காக அரசாங்க மாளிகையை விட்டுப் புறப்பட்டு எனது தலைவரின் இல்லத்திற்கு வந்து விட்டனர். எங்கள் இலாகாவினரில் இருவருக்கு அவர்களுடைய உடுப்புகளை அணிவித்து அந்தக்காரிலேயே செங்காட்டு மாளிகைக்கு அனுப்பி ஏமாற்றி யிருக்கிறார்கள்", எனப் பதிலளித்தான் தினகரன்.

"துப்பாக்கி சூடுபட்ட அவ்விருவரும் என்ன வானார்கள்?" என மீண்டும் கேட்கவே தினகரன் "அவ்விருவரும் எச்சரிக்கையாகவே சென்று இவன் சுட்டதும், அடிபட்டு விழுந்தவர்கள் போல் பாசாங்கு செய்தனர். அவர்களுக்கு காயமில்லை. மாமா! நீங்கள்

உடனே பூனேமேட்டிற்குச் செல்லவேண்டும் எழுந்திருங்கள் போவோம்" எனக்கூறவே, சாம்பசிவம் கோகிலத்தைப் பார்த்து "கோகிலம்! தலைவி பூரண சௌக்கியமடைந்து விடுவார்கள். அதைப்பற்றி நீ கவலையுருதே. ஸ்தாபனத்தின் வேலைகளை ஜாக்கிரதையாகக் கவனித்துக் கொண்டிரு. எங்கள் வேலை முடிந்ததும் இங்கு வருகிறோம்" எனக்கூறினர். பின் இருவரும் பிருந்தாவனத்தை விட்டுப் புறப்பட்டனர்.

தனித்திருந்த கோகிலத்தின் சிந்தையில் இரண்டு உருவங்கள் தோன்றின. ஒன்று சாந்த சொரூபமான கமலாதேவி. மற்றொன்று காத்தவராயரின் கைப்பாவையான அமிர்தாம்பாள். இருநிலையான அவர்களின் வாழ்க்கையைப் பற்றி சிந்தித்த வண்ணமிருந்தாள்.

# அத்தியாயம் 11

## தாயின்பாசமும் — தனயனின் வீரமும்

சாம்பசிவத்துடன் பிருந்தாவனத்தை விட்டுப் புறப்பட்ட தினகரன், அவரை பூனேமேட்டிற் கனுப்பி விட்டு நேராகத் தன் தலைவரின் வீட்டிற்குச் சென்றான். அங்குள்ள வேலையாள், தலைவி அவனைப்பார்க்க விரும்புவதாகச் சொல்லவே, தலைவியின் அறைக்குச் சென்றான். அங்கே தலைவியும் — சுந்தரமூர்த்தியும் பேசிக்கொண்டிருந்தனர். இவனைக்கண்ட சுந்தரமூர்த்தி "தினகரா! அம்மா உன்னைப் பார்க்க விரும்பினார்கள்" என்று கூறவே, அவன் அவர்களின் சமீபம் சென்று "அம்மா! என்னைப் பார்க்க விரும்பினீர்களாமே? என்னம்மா விஷேடம்?" எனக் கேட்டான்.

தலைவி படுக்கையை விட்டெழுந்து திண்டில் சாய்ந்து கொண்டார்கள். அவர்களுடைய முகம் பிரகாசமாயிருந்தது. அவனை அன்புடன் நோக்கி "தினகரா! நீ என்னைக் காப்பாற்றிய விபரத்தை உனது தலைவர் சொன்னார்கள். அரசாங்கத்தின் துரோகி என்ற பெயருடன் நானிருப்பதைவிட இறந்திருந்தால் மேலாக இருக்குமல்லவா? எனது வாழ்க்கையில் பெரும் பகுதியை அந்தக் காமுகனுக் கிரையாக்கி யநுபவித்த துன்பங்கள் போதாதா? மேலும், அரசாங்கத்தின் சிறையில் கிடந்தும் அநுபவிக்க வேண்டுமென்பது உன் விருப்பமா?........... ஆம்!........... உலகிலே இன்னும் அநுபவிக்க வேண்டியவைகள் பாக்கி யிருக்கும்போது, உன்மீது எங்ஙனம் குற்றஞ் சொல்ல முடியும்? நாட்

டிற்கு சேவை செய்ய வேண்டுமென்ற பொது நோக்கத்துடன் — விசால நோக்கத்துடன் பிருந்தாவனத்தை ஆரம்பித்திருந்தாலும், கமலாதேவி என்றமாறு பெயரில், மக்களையும், அரசாங்கத்தையும் ஏமாற்றியே வந்திருக்கிறேன். எப்பொழுது எனது வாழ்க்கையை பொது நன்மைக்காகத் தியாகஞ் செய்தேனே; அன்றே எனது உண்மையைத் தலைவரிடம் ஒப்புக்கொண்டிருக்க வேண்டும்..........பெருந்தவறு...........எனது எண்ணத்திற்கேற்ப மனம் பரிபக்குவ மடையவில்லை. மனதில் நிலவிய பலவீனம் எனது லக்ஷியத்தையே சிதைத்து விட்டது. இந்த ஒரு காரணத்தினாலேயே ஆஸ்ரம வாழ்க்கையிலும், மன நிம்மதி யிழந்திருந்தேன் என்பது இப்போது தெரிகிறது. தினகரா! இனிமேலும் "ரகஸ்யம்" என்பதற்கு என் மனதிலிடமில்லை. நற்குண நல்லொழுக்க முள்ள ஓர் புதல்வனைப் பெற்றும், அதன் பயனை — அந்த இன்பத்தை யடையாத துர்ப்பாக்கியவதியான ஓர் தாய் இருப்பாளேயாயின், அவள் நானாகத்தானிருக்க வேண்டும். என்னை உனது "தாய்" என நீ தெரிந்து கொண்டதாகச் சற்று முன் தலைவரவர்கள் சொன்னார்கள். அதை நீ என்றும் தெரிந்து கொள்ளலாகாதென்பதுதான் எனது எண்ணம். பிருந்தாவனத்திலே சேர்ந்த அன்றே எனது செல்வன் நீயாகவேயிருக்க வேண்டுமென்று தீர்மானித்தேன். உன்னைப் பற்றி உன் தலைவரிடம் விசாரித்தபோது, நீ அவர்களிடம் வந்து சேர்ந்த விபரத்தைச் சொன்னார்கள். கண்ணே! பட்டப் பகலிலே — கொதிக்கும் வெயி

விலே........பாவி உன்னை அடித்துத் தூக்கியது..........என்னால் அதை நினைக்கவும் முடியவில்லை. நானும் அதைப் பார்த்துக்கொண்டு தானிருந்தேன். என் மனதிலே அன்பு — இரக்கம் — பாசம் எதுதானிருந்தது? எல்லாவற்றையும் உனது தந்தையின் கொடூர நோக்கங்களுக்குப் பலியாக்கிவிட்டு, ஓர் இரக்கமற்ற வெறும் கட்டையாகவே யிருந்தேன். போகட்டும் பழய கதை. ஆஸ்ரம வாழ்க்கையை மேற்கொண்டதும் என் மனதிலே உள்ள ஆசாபாசங்களை யெல்லாம் ஒழித்துவிட முடிவு செய்திருந்ததினாலேயே, நான் யாரென்பதை உன்னிடம் சொல்லவில்லை. அதோடு நீ நல்ல இடத்தில், நல்ல முறையில் வளர்ந்து வருகிறாய். மேலும், எனது பிருந்தாவனத்தில் வேலை செய்து கொண்டுமிருக்கிறாய். எனவே, நம்மிருவரும் தாயும் — பிள்ளையு மென்பதைத் தெரிந்து கொள்ள வேண்டியது அவசியமென்று நினைக்கவில்லை.

உனது தந்தையின் பெயர் கந்தசாமி என்பதையும், உனது தாயின் பெயர் பாக்கியம் என்பதையும் நீ அறிவாய். ஆம்...........உனது தந்தை சிறையிலிருந்து தப்பி வந்தபின், இந்த மாறு பெயரிலேயே அரசாங்கத்தை ஏமாற்றிக் கொண்டிருந்தோம். அப்போது நீ ஒரு வயதுக் குழந்தை. எங்களுடைய நாடோடி வாழ்க்கையிலே உன்னை எங்கள் சாமான்களுடன் ஒரு பொருளாகவே மதித்துத் தூக்கிக் கொண்டு திரிந்தோம்.

செல்வ! ஒரு பெண்ணினுடைய செய்கைக்கும் என்னுடைய செய்கைக்கும் பெருத்த வித்தியாசமிருந்தே வந்தது.

உயர்ந்த குடும்பத்தில் பிறந்தேன். உன் தந்தை மீதுள்ள ஆசையால் எனது பெற்ருேரைப் பிரிந்து, உன் தந்தையின் பராமரிப்பிற்கு வந்து விட்டேன். நான் அவரை மனப்பூர்வமாக விரும்பினேன்; அவர் என் அழகைக் கருதியே விரும்பியிருக்கிருர். அதிலிருந்து சமீபகாலம் வரை எனது வாழ்க்கையிலே நிகழ்ந்த ஆபாசங்கள் பல. அவைகளை யெல்லாம் இப்போது என் மனத்தால் நினைப்பதற்கும் தகுதியற்றவைகள். வேண்டாம். அவைகளை நீ தெரிந்துகொள்ள வேண்டாம். என்று உன்னை உன் தந்தை வீட்டைவிட்டு அடித்துத் துரத்தினுரோ அன்றுதான் என் மனம் தூய்மை யடைந்தது. எனது ஜீவியத்தேர் அபாயகரமான பாதையில் செல்வதைப் பூரணமாய் உணர்ந்தேன். வாழ்க்கையை வெறுத்தேன். எனது எஞ்சிய வாழ்நாளைப் பொது நலனுக்கு தியாகஞ் செய்யத்தீர்மானித்தேன். எனது எண்ணத்தை உன் தந்தையிடம் சொன்னபோது, அவரும் சட்டென ஒப்புக் கொண்டார். ஒருவரோடொருவர் எதிலும் சம்மந்தப்படுவதில்லை யென்ற முடிவில் பிரிந்து விட்டோம். இந்த மாறுபட்ட எண்ணத்தோடு நான் அவருடனிருப்பதால் அவரது காரியங்களுக்கு இடைஞ்சலாக இருக்குமென்று எண்ணினுர் போலும்!

பிருந்தாவனத்தை ஆரம்பித்த இரண்டாவது வருஷம் நடைபெற்ற "பொருட்காக்ஷி"யின் போது, உனது தந்தையை இங்கு சந்தித்தேன். அவரிடம் சில நிமிஷங்கள் பேசிக் கொண்டிருந்தேன். அவர்

இந்த நகரத்திலே வட்டிக்கடை வைத்துப் பெருந் தொழில் செய்து வருவதாக அறிந்தேன். எனினும், அவர் ஏதோ ஓர் உத்தேசத்திலேயே இங்கு வந்திருக்க வேண்டு மென்று எண்ணினேன். எனது எண்ணமும் சரியாகவே யிருந்தது.

அரசாங்கத்திற் கெதிராக சூழ்ச்சிகள் நடைபெறு வதாக அன்று நீ சொன்னபோது, எனக்கு இவரைப் பற்றிய ஞாபகம் வந்தது. அந்தக் கூட்டத்தில் இவரும் ஒருவராகவே யிருக்க வேண்டு மென்று தீர்மானித் தேன். கோகிலம் கட்டிட நிதி வசூலுக்கு அவரிடம் போயிருந்தபோது, நீ அவளுக்கு அனுப்பிய கடிதத்தை என்னிடம் காண்பித்தாள். அதிலிருந்து நீ அவர்மீது சந்தேகங் கொண்டு அவரின் நடவடிக் கைகளைக் கவனித்துக் கொண்டிருக்கிரு யென்பதை யறிந்தேன். எனவே அவரும் இந்த சதிக்கூட்டத்தில் ஒருவரென்பது நிச்சயமாகி விட்டது. அவரழிவதில் யாருக்கு லாபம்? மன்ருடி அவருடைய அபாய நிலையை விளக்கி தலைவரிடம் போய் உண்மை ஒப்புக் கொள்ளச் செய்தால், அவருடைய மன்னிப்புக் கிடைத்தாலும் கிடைக்கலாமென்று எதிர்பார்த்தேன். அவ்விதம் தலை வரின் மன்னிப்பு கிடைத்து விட்டால், இவரை நல்ல வழிக்குத் திருப்பி இந்தக் கடைசி காலத்திலாவது இவரால் நாட்டிற்கு ஏதாவது ஒரு வழியில் பிரயோ சனம் கிடைக்கும்படி செய்யலா மென்று நினைத்தேன். ஆனால், அவரது குணம் எனக்குத் தெரியும். கோபத் திலே எதையும் செய்யத் துணிந்து விடுவார். எனினும்,

அவரை விரும்பியே எனது பெற்றோரையும் விட்டுப் பிரிந்தேன், அவரை சிறையினின்று விடுவித்து அரசாங்கத்தின் குற்றவாளியானேன், அவருடன் ஊர் ஊராய்ச் சுற்றி எல்லையற்ற துன்பத்தையனுபவித்தேன். இப்பொழுதும் அவரின் நன்மையை நாடியே எனது உயிரைத் தியாகஞ் செய்ய நிச்சயித்தேன். ஒன்று—அவரை என் வழிக்குத் திருப்பவேண்டும், இல்லையேல்—அவரால் நான் இறக்க வேண்டும். இந்த முடிவில் அவர் வீட்டிற்குச் செல்லும் நான் உயிருடன் திரும்புவேனென்று நிச்சயமில்லாததால் எங்களைப் பற்றிய எல்லா உண்மைகளையும் எழுதி தலைவருக்கு அனுப்பிவிட்டேன். அதில் உன்னைப் பற்றியும் குறிப்பிட்டிருக்கிறேன். உன் தந்தையிடம் எவ்வளவோ மன்றாடினேன். கடைசியில் எனக்குக் கிடைத்த பலன் இது தான். தினகரா! சேற்றிலே செந்தாமரை என்பார்களே! குப்பையிலே குண்டுமணி என்றும் சொல்லுவார்களே!! அதுபோன்று நாட்டின் துரோகிகளான எங்களுக்குப் புதல்வனாய்த் தோன்றினாய். இன்று குடியரசின் ஊழியனாய் — நாட்டின் அன்பனாய் விளங்கிக்கொண்டிருக்கிறாய். அது ஒன்றே போதும். உனது பெற்றோரின் செய்கைகளுக்குப் பிராயச்சித்தமாக விளங்கட்டும் உனது நற்செய்கை. பிற்காலத்தில் இந்நாட்டின் சரித்திரத்தில் உனது சிறந்த நோக்கங்கள் — செயல்கள் — வாழ்க்கை எல்லாம் பொன்னெழுத்துக்களால் பொறிக்கப் பெறும் வண்ணம் உனது ஜீவியத்தை தேசத்திற்கு அர்ப்பணம் செய்துவிடு. இது

தான் எனது வேண்டுகோள்" என்று ஆவேசம் வந்தவர்கள் போன்று இடையில் நிறுத்தாது கூறிமுடித்தார்கள். கண்களில் நீர் பெருகி யோடியது.

அவர்களது துன்பம் நிறைந்த சரித்திரத்தைக் கேட்டு சுந்தரமூர்த்தியும் துக்கமடைந்தார்.

தினகரன் ஒரு சிறிதும் கலக்க மடைய வில்லை. அன்னையின் கண்களிலே நீர் பெருக் கெடுத்தோடும் போது, அவன் மனமென்ன கல்லா! இரும்பா!! இல்லை அதனினும் கடிய ஒன்று? அவனது விழிகள் தீக்ஷண்யம் பெற்று விளங்கின. இந்த இளம் வயதிலேயே புலன்களை அடக்கும் சக்தியைப் பெற்றிருந்தானென்று தான் சொல்ல வேண்டும். அவன் மனதிலிருந்த எல்லாவற்றையும் வெளியே தள்ளிக் கொண்டு வந்தது நீண்ட பெருமூச்சொன்று. தன் தாயைப் பார்த்தான்— தன் தலைவரையும் பார்த்தான். இரு முகங்களிலும் துன்பக் கோடுகள் நிரம்பி இருந்தன.

தினகரன் தன் தாயைப் பார்த்து "அம்மா! துன்மார்க்கமே நிரம்பிய உங்கள் வாழ் நாளில் நீங்கள் செய்த ஒரே ஒரு நற்காரியம் – தனித்த பெருமையுடன் கூடிய செயல் — சரித்திரப் புகழ் பெறும் ஸ்தாபனம் "பிருந்தாவனம்," உலகம் உங்களை வெறுத்தாலும், உங்கள் ஸ்தாபனத்தை விரும்பும். உங்களுடைய தீவினைகளையும், நீங்களடைந்த துன்பங்களையும் மறைத்து நிற்கின்றது அது. எவரும் எளிதில் அடைய முடியாத பெருமையை — புகழை அடைந்த உங்கள் முகம் ஏன் கவலை தோய்ந்து விளங்குகிறது? கவலையை ஒழித்து

விடுங்கள். மனச்சாந்தி யடையுங்கள். நமது மாபெரும் தலைவருக்கு நீங்களனுப்பிய கடிதத்தின் பதிலைச் சந்தோஷமாக ஏற்றுக் கொள்ளுங்கள். அம்மா! நீங்கள் என் தந்தையின் கத்திக்கு இறையாகும் போதே, நீங்களிவரும் எனது பெற்றோர்களென்பதை அறிவேன். நீங்கள் எனது தாய் என்பதற்காக உங்களைக் காப்பாற்ற வில்லை; என்னிடம் அகப்பட்ட அரசாங்கத்தின் கைதி என்பதற்காகவே உங்களைக் காப்பாற்றி எனது தலைவரிடம் ஒப்புவித்தேன். எனது கடமை அது. அம்மா! அதிக நேரம் பேசியபடியால் களைப்பு ஏற்பட்டிருக்கும் நிம்மதியாக யிருங்கள். நான் மீண்டும் வந்து பார்க்கிறேன்" எனக்கூறி அவர்கள் பதில் சொல்வதற்கு அவகாசம் கொடுக்காமல் உடனே எழுந்து சென்று விட்டான்.

அவன் எழுந்து சென்றதும் சுந்தரமூர்த்தி "அம்மா! உங்களைப்போல் பாக்கியம் செய்தவர்கள் வேறு யாருமிருக்க முடியாது. நீங்கள் சொல்லியது போல் பிற்காலத்திய சரித்திரத்திலே, இவனது புகழ் பொன்னெழுத்துக்களால் பொறிக்கப் பெரும் என்பதில் ஒருசிறிதும் சந்தேகமில்லை. இப்போது தந்தையைக் கைதி செய்யச் செல்லும் இவனைப் போன்ற திட சித்தமுள்ள தனயனை நீங்கள் காணமுடியுமா?" என்றார்.

தலைவி பதில் சொல்ல வில்லை. எனினும் அவர்களது வதனத்தில் புன்சிரிப்பு பரவியது. ஆம்!............ தன் புதல்வன் என்ற பாசத்தால் எழுந்த சந்தோஷம்....

  

கொலை வெறி கொண்ட காத்தவராயர், இரவு முழுதும் தூக்கமில்லாது படுக்கையில் புரண்டு கொண்டிருந்தார். “தான் ஏமாற்றப்பட்டது உண்மைதானா? என் நட வடிக்கைகளைக் கவனிக்கும் ஒருவன் இங்கிருக்கிறானா? அவன் யாராக இருக்கும்..............ராயப்பனாக இருக் குமோ?...............இல்லை அவனாக இருக்காது. வேறு யார்.......ஆம்.............. அவன் தம்பியாகவே யிருக்க வேண்டும்........அப்படியானால் தம்பியினுடைய செய்கை அண்ணனுக்கு தெரியாதிருக்குமா? தெரிந்திருக் காது........எளிதில் அவனை ஏமாற்றி விடலாமல்லவா? ஆம்...........அவ்விதந் தானிருக்கும்” எனப் பற்பல எண்ணி குழப்பமடைந்தார்.

காலையிலெழுந்ததும் வீரப்பனைக் கூப்பிட்டார். அவன் வெளியே போயிருப்பதாக ராயப்பன் வந்து சொல்லவே, அவருக்கு சிறிது சந்தேகந் தோன்றியது. தனது அறைக்குச் சென்று இரும்புப் பெட்டியைத் திறந்து சாமான்களெல்லாம் சரியாக யிருக்கிறதா வெனப் பார்த்தார். கடிதக்கட்டுகளைப் பிரித்து அவைக ளெல்லாம் தான் வைத்தபடி யிருக்கின்றனவா வென்று ஆராய்ந்து பார்த்தார். அவைகளிலே பல கடிதங்கள் காணாது போயிருக்கவே, திகிலடைந்தார். சந்தேகம் முழுதும் வீரப்பன் மீதே சென்றது. பூட்டப் பட்டி ருந்த இரும்புப் பெட்டியை மறுசாவி போட்டுத் திறந்து கடிதங்களை எடுத்துக் கொண்டு மீண்டும் ஒழுங்காக சாமான்களை வைத்து பூட்டப் பட்டிருக்கிறதென்பதை யறிந்து, இவ்வளவு சாவதானமாக வேலைசெய்வதானால்

ராயப்பனின் உதவியின்றி முடியாதென்பதை யுணர்ந்து, பெட்டியைப் பூட்டிவிட்டு ராயப்பனை யழைத்தார். இவரின் செய்கையை டெலிவிஷன் மூலம் பார்த்துக் கொண்டிருந்த ராயப்பன் எழுந்து அவருடைய அறைக்கு ஓடி வந்தான். இவனைக் கண்டதும் காத்தவராயர் அதிக கோபமடைந்து "ராயப்பா! நானில்லாத சமயத்தில் இந்த அறைக்குள் யார் வந்தது"? எனக் கேட்டார்.

"யாருக்குத் தெரியுங்க?" என்றான் ராயப்பன் அமைதியாக.

"ராயப்பா! உண்மையைச் சொல் உனக்குத் தெரியாமல் இங்கே எதுவும் நடக்க முடியாது"

"அதை யாரு இல்லையின்னு சொல்லுறது...... அப்படி யென்ன தானுங்க நடந்து போச்சு?"

"இரும்புப் பெட்டியைப் பூட்டி சாவியை நான் வைத்திருக்கிறேன்; அப்படியிருக்க அதிலிருந்த கடிதங்கள் காணாது போயிருக்கிற தென்றால், அதிசயமாக வல்லவோ யிருக்கிறது இதுவரை யொன்றும் இப்படி நடந்ததில்லையே"

"இரும்புப் பெட்டியிலே யிருந்தது எப்படியுங்க காணாதே போகும்? எங்கேயாச்சும் போட்டிருப்பீங்க நல்லாத் தேடிப்பாருங்க"

"எல்லா யிடத்திலும் தேடிப்பார்த்து விட்டேன். நிச்சயமாய் கடிதங்களை யாரோ எடுத்திருக்க வேண்டும். உனக்குத் தெரியாமலும் நடந்திருக்காது உண்மையைச் சொல்லிவிடு ராயப்பா"

"இத்தனை வருஷமா யில்லாமே இப்பமட்டும் என் மீது சந்தேகப் படுறீங்களா? சத்தியமாய்ச் சொல்லு ரேன் எஜமான், அதை நான் கண்ணுலே கூடப் பார்க்கலீங்க எனக் கென்னத்துக்குங்க அது"

"நீ எடுத்திருக்க மாட்டாய், நீ யறியாமல் வேறு யாரும் இந்த அறைக்குள் நுழைந்து எடுத்திருக்க முடி யாதென்று தான் சொல்லுகிறேன். எடுத்தவர்களைச் சொல்லிவிடு"

"அதென்னங்க அப்படிச் சொல்லுறீங்க; எனக்குத் தெரிஞ்சு ஒருத்தன் இந்த அறையிக்குள்ளே நுழைஞ் சுடவா? அவ்வளவு நெஞ்சுரமா அந்தப் பயலுக்கு? ஒரே யடியால் கொன்னுட மாட்டேன்."

"என்னடா ஒரே யடியாய் அளக்கிறாய். நீனும் கடிதத்தை எடுக்கவில்லை; எடுத்தவர்களையும் தெரியாது, வேறு யாரும் இந்த அறைக்குள் நுழையவுமில்லை. பின் அந்தக் கடிதங்கள் மாயமாய் மறைந்தா போய்விட் டன?" என்றார் ஆத்திரத்துடன்.

ராயப்பனுக்கும் ஆத்திரத்திரமா யிருந்தது "ஒரு வேளை அப்படித் தானுங்க இருக்கணும். இந்த அறைக் குள்ளே வந்த ஆளே மாயமாய் மறைந்து போகும் போது.......இது கடதாசி தானுங்களே? அப்படியே பறந்து கூடப் போயிருக்குங்க" என்றான் கோபமிகுதி யால் தான் என்ன சொல்லுகிறோம் என்பதையும் அறியாது.

காத்தவராயர் திடுக்குற்றார். அவரது தேகம் நடுங் கியது. "இவன் யாரைப் பற்றிச் சொல்லுகிறான்?

இங்கு வந்த அமிர்தத்தைப் பற்றியா? அவள் மறைந்த மாயத்தை யறிந்த இவனுக்கும் அதே கதிதான்" எனத் தீர்மானித்தார்.

கொலைஞனுடைய எண்ணம் எவ்வளவு விரிந்து செல்லுகிறது. ஒரு கொலையை மறைக்க மற்றொரு கொலையா? அட துன்மார்க்கனே!

"ராயப்பா! இங்கு வந்த ஆள் மாயமாய் மறைந்ததைத் தெரிந்து கொண்டிருக்கும் போது, காணுது போன கடிதங்களைப் பற்றியும் நீ அறிந்து தானிருக்க வேண்டும். உண்மையைச் சொன்னுல் நீ உயிர் பிழைக்கலாம். இல்லையெனில், நீயும் இந்த அறையிலிருந்து மாயமாய் மறைந்து விடுவாய்" என்ருர் கடுகடுப்புடன்.

"எஜமான்! நானும் எத்தனையோ மனுசர்களைப் பார்த்திருக்கிறேன்; உங்களைப் போல ஒரு பொம்புளையைப் பின்னுடியிருந்து குத்திக் கொலை செய்தவங்களைப் பார்த்ததுமில்லை—கேட்டதுமில்லை. ஆண்பிள்ளை யின்னு மீசையை வேறே முறுக்கிக்கிறீங்க. அவங்களைச் செய்தது போல என்னையும் செய்திடலாமுன்னு நினைக்கிறீங்களா? இவன் யாரு தெரியுமா? ஆண் பிள்ளை சிங்கம்" என ஏளனமாகக் கூறினுன்.

தான் இதுவரை உண்மையுள்ள ஊழியனென நினைத்திருந்த ராயப்பனே ஐந்தாம் படை ஆளாகயிருந்து வேலை செய்திருக்கிருன் என எண்ணினுர் காத்தவராயர்.

"அட துரோகி! இதுவரை என் சோற்றையே தின்று கொண்டிருந்து, எனக்கே வினையைத்

தேடுகிறாயா" என இரைந்த வண்ணம் மேஜை மீது கிடந்த ரிவால்வரைக் கையிலெடுத்து இவனைச் சுட யத்தனிக்கும் போது, ராயப்பன் திடீரெனப் புலிபோல் பாய்ந்து அவர் கரத்திலிருந்த ரிவால்வரை மேல்நோக்கித் தட்டிவிட்டான். இந்தப் போராட்டத்தில் காத்தவராயரின் விரல் அழுந்தி வெளிப்பட்ட குண்டு அவருடைய நெற்றியிலே பட்டு மண்டை ஓட்டை பிளந்து சென்றது. வெட்டிச் சாய்ந்த மரம்போல் தடாலெனக் கீழே சாய்ந்தார் காத்தவராயர்.

அதே சமயம் அந்த அறையின் கதவு திறக்கப்பட்டு தினகரனும் இரண்டு உத்யோகஸ்தர்களும் அறைக்குள் நுழைந்தனர். அவர்களைக் கண்டதும் ராயப்பன் பயந்து நடுநடுங்கி விட்டான்.

இவன் நடுங்குவதைக் கண்ட தினகரன் "ராயப்பா! பயப்படாதே உன்னையொன்றும் செய்ய மாட்டோம். இங்கு நடந்தவைகளை யெல்லாம் உன் தம்பியின் கண்ணாடி மூலம் பார்த்துக் கொண்டே யிருந்தோம். நீங்களிருவரும் சண்டை போடுவதைப் பார்த்ததும், உன்னைக் காப்பாற்றவே ஓடி வந்தோம். நல்ல வேளை உனக்கொன்றும் ஆபத்தில்லை. அவர்வினை அவரைக் கொன்றது. முழுவிபரமும் சொல்லுகிறேன்" எனக்கூறி தரையில் கிடந்த காத்தவராயனின் உடலை தன்னுடன் வந்த ஒருவனிடம் ஒப்புவித்து ஆஸ்பத்திரிக்குக் கொண்டு செல்லும்படி கூறிவிட்டு, அந்த வீட்டின் ஒவ்வொரு அறையையும் பூட்டி முத்திரை வைத்து, வீட்டை தன்னுடன் வந்த மற்றொரு உத்தி

யோகஸ்தனிடம் ஒப்புவித்து விட்டு ராயப்பனை யழைத்துக் கொண்டு சென்றான்.

காத்தவராயரின் இருபத்தைந்து ஆண்டுகளின் முயற்சி — கடமை — லக்ஷியம் எல்லாம் ஒரு குண்டுக் கிரையாகி விட்டது. அவருடைய மரணத்திற்காக வருந்துபவர் ஒருவருமில்லை எனினும், அவரின் வாழ்க்கை மக்களுக்குப் படிப்பினையா யிருக்கும்.

# அத்தியாயம் 12



## கடமையில் தவறாத இளைஞன்

ஒவ்வொரு வருடமும் மக்கள் ஆவலுடன் எதிர்பார்க்கும் அந்த இருபதாந் தேதி அன்று. மக்களுடைய வாழ்க்கை நிலையை உயர்த்திய அந்நாளை புனித நாளாகக் கொண்டு, நகரெங்கும் நாட்டின் கொடியை ஏற்றுவித்து, கொடி வணக்கஞ் செய்து, தேசீயப் பாடலைப் பாடிக்கொண்டு ஊர்வலமாகச் சென்று அரசாங்க மாளிகையின் முன் புறமுள்ள மைதானத்தில் கூடுவார்கள். அங்கு நடைபெறும் போட்டி விளையாட்டுகளை எல்லாம் கண்டுகளிப்பார்கள். இறுதியாக நடைபெறும் குடியரசுத் தலைவரின் பிரசங்கத்தைக் கேட்டு குதூகலத்துடன் வீடுகளுக்குத் திரும்புவார்கள்.

எவ்வருடம் போல அவ்வருடமும் "குடியரசு தினம்" சிறப்பாகக் கொண்டாடப்பெற்றது. நாடெங்கு முள்ள மக்கள் ஒன்று கூடினார்கள் அங்கு. ஜன சமுத்திரமென்று சொல்லும்படி அவ்வளவு பெரிய கூட்டம். மைதானத்தின்மத்திய பாகத்திலே ஒவ்வொரு விளையாட்டாக நடைபெற்றுக் கொண்டிருந்தது. கடைசியாக நடைபெற்றது "எருமை மாட்டுச் சண்டை." பாமர மக்கள் வெகுவாக விரும்பும் விளையாட்டது. ஜனங்களுடைய முழுக்கவனமும் அந்த விளையாட்டிலே சென்றிருந்தது. குடியரசுத் தலைவரும் — மந்திரிகளும் — உத்தியோகஸ்தர்கள் பலரும் சமீபத்திலிருந்து பார்த்துக் கொண்டிருந்தனர். அவர்

களுக்குப் பின்புறம் ஞானனந்தரும் சிகப்புவில்லே யணிந்த நூற்றுக்கு மேற்பட்ட அவரது ஆட்களும் நின்று கொண்டிருந்தனர். ஞானனந்தரின் பின்புறம் நின்ற தினகரனும் சாம்பசிவமும் அவருடைய நட வடிக்கைகளைக்கவனித்துக்கொண்டிருந்தனர். காத்தவ ராயர் இறந்த விஷயம் தினகரனல் ரகஸ்யமாக வைக் கப்பட்டிருந்த படியால், ஞானனந்தருக்கு உண்மை தெரியாது. எனினும், அவருடைய உளவாளிகளால் வீட்டில் காத்தவராயருடைய நடமாட்டமில்லே யென் றும், வீட்டை அரசாங்க உளவாளிகள் பாதுகாத்து வருகின்றனரென்றும் அறிந்தார். எனவே, காத்தவரா யர் எங்கோ தலைமறைவாய் யிருக்க வேண்டுமென் றும், குறிப்பிட்டபடி அங்கே வந்துவிடக் கூடுமென் றும் நினைத்து, அவருடைய வரவை ரொம்ப நேரமாக எதிர்பார்த்த வண்ணமிருந்தார். அந்த விளையாட்டு முடிந்ததும் தலைவரும் மந்திரிகளும் சென்று விடுவார் களாகையால் துடிதுடித்தார். விளையாட்டு முடியுந்தரு ணம் நெருங்கி விட்டது. இனிமேல் காத்தவராயரை எதிர்பார்ப்பதால் பிரையோசன மில்லேயென எண்ணி, தன் மடியிலிருந்த ரிவால்வரை எடுத்து தலைவரின் தலே க்கு நேராகப் பிடித்தார். அப்பொழுது தினகரன் "ஞானனந்தரே! இது வெறுந்துப்பாக்கி. இதோ இருக் கிறது இதை வாங்கிக் கொள்ளுங்கள்" என ஏளனமா கக்கூறி, சட்டென்று தன் கையிலிருந்த விலங்கை அவர் கையில் பூட்டி விட்டான். இவ்விதம் நடக்கு மென்று சிறிதும் எதிர்பாராத ஞானனந்தர், ப்ரமித்து

அப்படியே அசைவற்று நின்று விட்டார். அதேசமயத் தில் அவரது ஆட்களெல்லாம் அவர்களின் பின்புறம் நின்று கொண்டிருந்த தினகரனின் ஆட்களால் விலங்கி டப்பட்டு அழைத்துச் செல்லப்பட்டனர். ஒரு சிறிது குழப்பத்துடன் விளையாட்டும் முடிந்து, தலைவரும் உத்தி யோகஸ்தர்களும் எழுந்து அரசாங்க மாளிகைக்குச் சென்றனர்.

அடுத்த படியாக நடைபெறும் தலைவரின் பிரசங் கத்தைக் கேட்பதற்காக ஜனங்கள் மாளிகையின் பக்கம் திரும்பி நின்று கொண்டு தலைவரின் வரவை ஆவலுடன் எதிர்பார்த்தனர்.

அரைமணி நேரத்திற்குப் பிறகு தலைவர் மேல் மாடிக்கு வந்து தமது அன்புமிகும் விழிகளால் மக்களை நோக்கி கரங்குவித்து வணங்கினர். பிரசங்கம் அதிக தூரம் வரைக் கேட்கும்படி ஒலி பெருக்கிக் கருவிகள் பல வைக்கப் பட்டிருந்தன. மக்கள் ஆவலுடன் எதிர் பார்த்திருந்த தமது பிரசங்கத்தை ஆரம்பித்தார் தலைவர்: மகா ஜனங்களே!

நமது நாடு குடியரசான 25ம் ஆண்டு நிறைவை சிறப்பாக இன்று கொண்டாடினேம். மக்களின் மனே பலத்துடன் கூடிய ஒத்துழைப்பைப் பூரணமாகப் பெற்ற நாடு, உலகில் தனிச்சிறப்புப் பெற்று விளங்கு மென்பதைக் கண்டோம்.

நோக்கம்.

விவசாயம் பெருகவேண்டும். பொருளுற்பத்தி அதிகரிக்க வேண்டும். கல்வி யறிவு வளர வேண்டும்.

பொதுவாக நம் நாட்டு மக்களின் வாழ்க்கை நிலை எல்லா வழியிலும் உயர வேண்டும். இது தான் நமது குடியரசின் நோக்கம்.

பொருளாதாரம்.

இந்த நமது நோக்கங்கள் நிறைவேறுவதற்கு பொருளாதார நிலை சரியாக அமைந்திருக்கவில்லை. அதனால், நமது திட்டங்களெல்லாம் சாவதானமாகவே நிறைவேறிக்கொண்டிருக்கின்றன. அதைச் சீர்திருத்துவதற்கு இந்த ஆண்டிலே பல சட்டங்களை அமுலுக்குக் கொண்டு வந்தோம்.

சட்டங்கள்.

அதிகப் படியான வருமான முள்ளவர்களுக்கு அவர்களின் வருமானத்தில் ஒரு பகுதியை வரியாக விதிக்க வேண்டுமென்பது அந்தச் சட்டங்களில் ஒன்று. அதுவும் ரொம்ப குறைந்த விகிதந்தான். இரண்டாவது ஏற்றுமதியைக் கட்டுப்பாடு செய்வது. மூன்றாவது இறக்குமதியை குடியரசின் நிர்வாகத்திற்குக் கொண்டு வருவது. பின் சொன்ன இரு விஷயங்களும் இதுவரை ஒரு சிலரின் ஆதிக்கத்திற் குட்பட்டிருந்தது. கிராமங் கிராமமாகச் சென்று, விவசாயிகளுக்குக் கடன் கொடுத்து, தானியங்கள் அறுவடையானதும் கடனுக் கீடாக அவைகளைப்பிடுங்கி, வெளி நாட்டிற்கேற்றுமதி செய்து, பெருத்த லாபம் சம்பாதித்து வந்தனர். இதனால் நமது சகோதரர்களுக்கு—நாள் முழுதும் உழைத்ததின் பயனை இவர்கள் கையில் கொடுத்த அந்தப் பாட்டாளி மக்களு

க்குத் தேவையான தானியங்கள் கிடைப்பதற்கு வழியில்லாது போய்விட்டது. அதோடு வெளிநாட்டினின்று இறக்குமதியாகும் பொருள்களையும் சேமித்து வைத்து அந்த வழியிலும் ஏராளமாகச் சம்பாதித்து வந்தனர். எனவே, நமது நாட்டின் தேவைக்கு மீறிக்கிடக்கும் பொருள்களையே ஏற்றுமதி செய்யலாமென்றும், இறக்குமதியை அரசாங்கத்தின் நிர்வாகத்திற்குக் கொண்டு வந்து எல்லோருக்கும் சாமான்கள் விலை மலிவாகக் கிடைக்கும்படியும் செய்வேண்டியது அவசியமாயிற்று.

எதிர்ப்பு.

இதுவரை இவ்விரண்டு வழிகளிலும் நாட்டைக் கொள்ளையடித்துக் கொண்டிருந்த எனது பணக்கார நண்பர்கள், புதிய சட்டங்களால் பாதகமடைந்து விட்ட தாகக் கூக்குரலிட்டனர். இடைவிடாது எதிர்த்தும் வந்தனர். இச்சட்டங்கள் சர்வாதிகார முறையில் ஏற்பட்டதல்ல. உங்களின் பிரதிநிதிகளால் நிறைவேற்றப் பட்டவைகளே யாகும்.

கவனிக்க வேண்டும்.

அந்த எனது நண்பர்கள்-அவர்களுடைய வேண்டுகோள்களும், மகஜர்களும் ஏன் நிராகரிக்கப் பட்டனவென்பதைக் கவனிக்கவேண்டும். இது சபையோரின் பெரும்பாலான அபிப்பிராயம் என்பதை அவர்கள் உணர வேண்டும்.

இரக்கங் காட்டுங்கள்.

தங்களுடைய உழைப்பினுல், நமக்கு ஏராளமான

தானியங்களைக் கொடுக்கின்றார்களே — தங்கள் கைத் திறமையால் வாழ்க்கைக்கு ஏற்ற பொருள்களை விதவித மாகச் செய்து கொடுக்கின்றார்களே — தங்கள் வாழ் நாளை முழுதும் அநுபவிப்போருக்கு அர்ப்பணம் செய்து விட்டிருக்கிறார்களே — அந்த வறுமை மிகுந்த விவசாயி களிடம் — அந்த ஏழைத் தொழிலாளிகளிடம் சிறிது இரக்கங் காட்டுங்கள் — அவர்களின் நலனைச் சிறிது கவனியுங்கள் என்று தான் எனது அந்த நண்பர்களுக் குச் சொல்லுகிறேன்.

என்ன செய்யவேண்டும்?

அந்த விவசாய மக்களிடத்திலேதான் நமது நாட்டினுடைய உயிர்நாடி யிருக்கிறது. நாடு உயர்வ டைய வேண்டுமானால், நாம் என்ன செய்ய வேண்டும்? விவசாய – தொழிலாள மக்களுடைய நிலையை உயர்த்த வேண்டும். இந்த உண்மையை எனது நண்பர்கள் புறக் கணிக்க முடியாது.

யந்திர மனிதர்கள்.

அந்த நண்பர்களுக்குத் தேசபக்தியில்லையா? தங் கள் சகோதரர்களிடம் அன்பற்றவர்கள் என்று தான் சொல்லலாமா? இல்லை........அப்படிச் சொல்வதற்கில்லை. அவர்களுடைய இருபெரிய தலைவர்களின் போதனை யால் மதிமயங்கி யந்திர மனிதர்களாகி விட்டதன் ஓர் நிலையே இது.

திடுக்குறுவீர்கள்.

நீங்களெல்லாம் ஆச்சரியப் படக்கூடிய ஓர் விஷ யத்தை உங்களுக்குச் சொல்லுகிறேன். நமது பணக்

கார நண்பர்கள் என்னையும், முதல் மந்திரி தர்மசீல ரையும் கொலை செய்துவிட்டு இந்த "குடியரசை"க் கைப்பற்றுவதற்கு சதி செய்தார்கள் என்று சொன்ஞல் நீங்கள் திடுக்குறுவீர்கள்.

ரகஸ்ய சங்கம்.

எனது நண்பர்களின் எதிர்ப்பு பலனற்றுப் போகவே, அவர்களெல்லாம் ஒன்று சேர்ந்து ஒரு ரகஸ்ய சங்கத்தை நிறுவி அதன் மூலம் துரிதமாக வேலை செய்து வந்தனர். அந்த ரகஸ்ய சங்கத் தலைவர் இருவர். ஒருவர்—உங்களுடைய மதிப்பிற்குப் பாத்திரமான ஞானனந்த சுவாமிகள். (இந்தப் பெயரைக் கேட்டதும் கூட்டத்தில் ஒரே ஆரவாரம் கிளம்பியது) மற்ருரு வர்—பிரபல்யம் வாய்ந்த—உங்கள் எல்லோருக்கும் தெரிந்த காத்தவராயர். அவ்விருவரும் சுமார் 25 வருடங்களுக்கு முன் சிறையிலிருந்து தப்பியோடிய கைதிகளான உக்கிரமசிங்கனும் — நஞ்சப்பனுமே யாவார்கள். (மீண்டும் ஆரவாரம்) என்மீதுள்ள வஞ்சத்தைத் தீர்த்துக் கொள்வதற்காகவே அவர்கள் பல வருடங்களாக இந்த மாறு பெயரில் இதே நகரத்தில் வசித்து வந்தனர். இந்த சட்டங்கள் அமுலுக்கு வந்ததும் பிரபுக்களை எல்லாம் ஒன்று சேர்த்து ரகஸ்ய சங்கத்தை ஏற்படுத்தினர்கள். அவர்களுடைய முக்கிய நோக்கம் என்னையும் மந்திரி தர்மசீலரையும் கொலை செய்வது தான்: அவ் வழியிலே முயன்றும் பார்த்தார்கள். இம் மாதம் 15ந்தேதி எங்களிருவரையும் — பிருந்தாவனத் தலைவியையும் கொலை செய்ய முயற்சித்தான் காத்தவ

ராயன் என்னும் நஞ்சப்பன். தக்க சமயத்தில் எல்லோரும் காப்பாற்றப் பட்டோம். பிருந்தாவனத் தலைவிக்கும் காத்தவராயனுக்கும் என்ன சம்மந்தமென்பதை அறிய ஆவலுள்ளவர்களாக இருப்பீர்கள். இந்த இரு கைதிகளும் சிறையிலிருந்து தப்பி யோடுவதற்கு உதவி செய்து அரசாங்கத்தின் குற்றவாளியா யிருப்பவளும் இருவரில் ஒருவனுன — நஞ்சப்பனின் மனைவியுமான அமிர்தாம்பாள் என்னும் தர்மாம்பாளே அவர்கள். எனினும், அத்துன்மார்க்க னிடமிருந்து பல வருடங்களுக்கு முன்பேபிரிந்து சீர்திருந்தி பிருந்தாவனத்தை யாரம்பித்து நாட்டிற்குப் பெரும்பணி செய்து வந்திருக்கிறார்கள். எனவே, சுதந்திரதின விழாவன்று அவர்களுடைய குற்றம் மன்னிக்கப்படுகிறது. (கரகோஷம்.)

வினையின் பயன்.

அரசாங்கத்தின் தண்டனைக்குத் தப்பிய காத்தவராயன் தெய்வ தண்டனைக்குட் பட்டுவிட்டான். தங்களுடைய ரகஸ்யங்களை அறிந்து அரசாங்க உளவாளிகளுக்கு உதவியாயிருக்கிறுன் என எண்ணி தனது வேலையாளான ராயப்பன் என்பவனை கொலை செய்ய எத்தனித்தபோது, அவனால் தட்டி விடப்பட்ட துப்பாக்கி காத்தவராயனின் மண்டையில் பட்டு மண்டை ஓடு பிளந்து அந்த இடத்திலேயே மாண்டு போனுன். (கூட்டத்தில் — தொலையட்டும் — வேண்டும் என்ற கூக்குரல்கள் ஆவேசத்துடன் கிளம்பின) அதோடல்ல, சற்று முன் மாட்டுச் சண்டை நடந்தபோது எங்களைக் கொலை செய்ய முயன்ற ஞானனந்தரென்னும்

உக்கிரமசிங்கனும் அவனுடைய ஆட்களும் கைது செய்யப்பட்டனர். இதிலிருந்து இந் நாட்டிலே அக்கிரமங்களுக்கு இடமில்லை யென்பது தெளிவாகி விட்டது. தங்கள் தலைவர்களிருவரும் யார் என்பதை யறியாது அவர்களின் தனிப்பட்ட நோக்கங்களுக்குப் பலியான ரகஸ்ய சங்கத்தினர்களான நமது நண்பர்கள் தங்கள் செய்கைக்காக வருந்துவார்களென்று நினைக்கிறேன். இனிமேலாகிலும் அவர்கள் தங்கள் கடமையை உணர்வார்களென்று நம்புகிறேன்.

கடமையில் தவருத இளைஞன்.

இவ்வளவும் நமது துப்பு இலாக்காவிலுள்ள இளைஞன் தினகரன் என்பவனுலேயே கண்டு பிடிக்கப் பட்டன. நீங்களெல்லாம் ஆச்சரியமடையும் படியான மற்ருேர் விஷயத்தை உங்களுக்குச் சொல்லுகிறேன். தினகரன், நஞ்சப்பன் — அமிர்தாம்பாளுடைய புதல்வன் என்பதை உங்களுக்குச் சொல்லுகிறேன். நமது இளைஞர்களின் மனப்பான்மை என்ன வென்பதை எடுத்துக் காட்டவே இதை உங்களுக்குச் சொன்னேன். பெற்ருேர்களென அறிந்தும் தனது கடமையில் ஒரு சிறிதும் தவருது நிறைவேற்றி யிருக்கிருன். இன்று நமது குடியரசு தின ஞாபகார்த்தமாக காத்தவராயரிடமிருந்து பறிமுதல் செய்யப்பட்ட அவருடைய சொத்துக்களை தினகரன் — அமிர்தாம்பாள் இவர்களின் விருப்பத்தின்படி பிருந்தாவன வளர்ச்சிக்குக் கொடுக்கப் படுகிறது.

உங்களைப் போன்ற பாட்டாளி மக்களும், தினகரனைப்போன்ற திடசித்த முள்ள வாலிபர்களும் நிறைந்த நமது குடியரசை உலகம் போற்றும். குடியரசு வாழ்க! என்றார் தலைவர்.

ஜனப் பேரலையின் வாழ்த்தொலியுடன் தலைவரின் பிரசங்கம் முடிவுற்றது.

  

அன்று இரவு, சுந்தரமூர்த்தியின் இல்லத்தில் அவர், சாம்பசிவம், கோகிலம், தினகரன், ராயப்பன் எல்லோரும் ஒன்று கூடினர். காத்தவராயர் இறந்து விட்டதையும் தலைவரால் அவர்கள் மன்னிக்கப் பட்டதையும் தலைவியிடம் சுந்தரமூர்த்தி சொன்னார். அவர் சொல்லியவற்றைக் கேட்ட தலைவி, தினகரனைப் பார்த்து, "தினகரா! உனது தந்தை தெய்வ தண்டனை பெற்றார். உனது தாய் நாட்டின் மன்னிப்பைப் பெற்றாள். நீயோ 'கடமையில் தவறாத இளைஞன்' என்ற பெரும் புகழை அடைந்தாய்" என்றுகூறி சிறிது நிறுத்தினார்கள்.

அப்பொழுது சாம்பசிவம் "அம்மா! தினகரனுடைய திறமைக்கு — அவனுடைய தொண்டிற்குப் "பரிசு" ஒன்று கொடுக்க விரும்புகிறேன்" என்றான்.

அவன் கொடுப்பதான "பரிசு" என்ன வென்பதை ஓரளவு எல்லோரும் தெரிந்து கொண்டனர். காதலர்களான கோகிலமும் — தினகரனும் ஒருவரை யொருவர் கடைக்கண்ணால் பார்த்து உளம் பூத்தனர்.

தலைவி புன்சிரிப்புடன் "சாம்பசிவம்! தாராளமாய் கொடுக்கலாமே நீ கொடுக்கும் பரிசையும் அவன் ஏற்றுக்கொள்ள மறுப்பானோ?" என்றார்கள்.

"மறுக்க முடியாத ஒன்றையே கொடுக்கின்றேன்" எனக்கூறிய வண்ணம் கோகிலத்தின் கரத்தைப் பிடித்து தினகரனின் கரத்துடன் ஒன்று சேர்த்தான்.

அப்பொழுது ஒரு மூலையில் நின்று கொண்டிருந்த ராயப்பன் சந்தோஷம் தாங்காதவனாய், "தம்பி! வீரப்பா!! அந்தக் கையை அப்படிப் புடிச்சு நெரிக்கிறியே" என்றான்.

எல்லோரும் "கொல்" எனச் சிரித்தனர்.

அந்த சிரிப்பொலியுடன் அத்தம்பதிகளுக்கு நமது வாழ்த்தொலியும் சேரட்டும்.



## எமது நன்றி

இடைவிடாத பல வேலைகளிடையேயும், இந் நவீனத்தை முழுதும் வாசித்து முகவுரை தந்த உயர்திரு சோ. இலக்குமிரதன் பாரதி எம். ஏ., பி. எல்., அவர்களுக்கு எமது நன்றி உரித்தாகுக.

நா. சோமசுந்தரம்.



# பிழை திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 7 | 22 | யிருக்கயேண்டும் | யிருக்கவேண்டும் |
| 10 | 21 | வாஸ்தவன் தான் | வாஸ்தவந்தான் |
| 24 | 21 | முக்கிமான | முக்கியமான |
| 27 | 16 | சகோதரதத்துவம் | சகோதரத்வம் |
| 33 | 5 | குழைந்து | குழைந்தது |
| 40 | 4 | புறப்பிட்டார் | புறப்பட்டார் |
| 100 | 6 | சுவரத்தில் | ஸ்வரத்தில் |
| 112 | 12 | பாண்மை | பான்மை |
| 137 | 13 | சங்கதேகங் | சந்தேகங் |



